# தமிழ் நாடகத் தலைமை ஆசிரியர்

(தவத்திரு சங்கரதாஸ் சுவாமிகள் வாழ்க்கை வரலாறு)



டி.கே. சண்முகம்

# தமிழ் நாடகத் தலைமை ஆசிரியர்

(தவத்திரு சங்கரதாஸ் சுவாமிகள் வாழ்க்கை வரலாறு)

எழுதியவர் :

பத்மஸ்ரீ அவ்வை டி.கே. சண்முகம்

**பூவழகி பதிப்பகம்**

73, சீனிவாச பெருமாள் சந்நிதி முதல் தெரு,
இராயப்பேட்டை, சென்னை - 600 014.
தொலைபேசி : 2835 1189

# நூல் விவரப் பட்டியல்


| | |
|---|---|
| நூலின் பெயர் | **தமிழ்நாடகத் தலைமை ஆசிரியர்** |
| மொழி | தமிழ் |
| நூல் வகை | வரலாறு |
| ஆசிரியர் | **அவ்வை டி.கே. சண்முகம்** |
| பதிப்பு ஆண்டு | முதற் பதிப்பு ஏப்ரல் - 2006 |
| பக்கங்கள் | 64 |
| நூல் அளவு | 18 5 x 12 5 செ.மீ |
| எழுத்து | 11 புள்ளிகள் |
| தாள் | 11.2 கி.கி வெள்ளைத் தாள் |
| பைண்டிங் | சாதாரண அட்டை |
| படிகள் | 1000 |
| வெளியீடு | **பூவழகி பதிப்பகம்**<br>73, சீனிவாசப் பெருமாள் சன்னதி<br>முதல் தெரு, இராயப்பேட்டை,<br>சென்னை - 600 014 |
| ஒளி அச்சு | **விக்னேஷ்வர் கிராபிக்ஸ்**<br>சென்னை - 600 005<br>போன் 9444483312 |
| அச்சிட்டோர் | **மூவேந்தர் அச்சகம்**<br>73, சீனிவாசப் பெருமாள் சன்னதி<br>முதல் தெரு, இராயப்பேட்டை,<br>சென்னை - 600 014<br>போன் 28351189 |

**விலை : ரூ. 20.00**

# என்னுரை

**நா**டகத் தமிழைப்பற்றி நாள்தோறும் பேசுகிறோம் அதைப் பேணி வளர்த்த பெரியாரைப்பற்றி நாடு இன்னும் பேசவில்லை.

1922-ஆம் ஆண்டுவரை நம்மிடையே வாழ்ந்து மறைந்த **தமிழ் நாடகத் தலைமையாசிரியர்** ஒருவருடைய பெயர் தமிழ் மக்கள் மனத்திலே நின்று நிலவும் அளவுக்கு நன்கு விளம்பரப்படுத்தப்படவில்லை

நாடக உலகம் மட்டுமன்று, தமிழ் இலக்கிய உலகமே தன் இதயத்தில் வைத்துப் போற்ற வேண்டிய பெரும் புலவர் **தவத்திரு சங்கரதாஸ் சுவாமிகள்.**

ஆனால், தமிழ் இலக்கிய வரலாறு எழுதுவோருக்கு எங்கள் சுவாமிகளைப்பற்றி எதுவும் தெரியாது பெயரைத் தெரிந்த ஒரு சிலருக்கும் அவருடைய பெருமை தெரியாது இது காலம் செய்த சதி.

சுவாமிகளின் ஆயிரக்கணக்கான மாணாக்கர் கூட்டத்தில் அடியேனும் ஒருவன், அவர் வாழ்ந்த காலத்தில் நான் அறியாச் சிறுவன நனகு அறிமுகப்படுத்தும் அளவுக்கு உறவாடிப் பழகியவனல்லன்

*பெரியவர்கள் யாரேனும் இப்பணியைச் செய்திருந்தால் பெருமகிழ்ச்சியடைந்திருப்பேன் என்ன செய்வது? எவரும் முன்வரவில்லை*

*எனக்குத் தெரிந்த சில குறிப்புகளும் என்னுடன் மறைந்து விடக்கூடாதே என்னும் எண்ணத்தால் எழுதத் துணிந்தேன் பிழையிருப்பின் பொறுத்தருள்க.*

*இது, எனக்கு நாடகக் கல்வி பயிற்சி நல்வழி காட்டிய குருநாதருக்கு நான் செலுத்தும் நன்றிக் கடன்*

*இந்நூலில் குறிப்பிடப்பட்டுள்ள பல நிகழ்ச்சிகளையும் எனக்கு அறிவித்த பெரியார்களுக்குத் தலை வணங்குகிறேன்*

*சுவாமிகளின் புலமைக்குச் சான்று கூறும் ஒரு பாடல் இந்நூலில் சேர்க்கப்பட்டுள்ளது. அது தமிழ்ப் பேரறிஞாகள் அவரை நன்கறிந்து கொள்ளத் துணை செய்யுமென்று நம்புகிறேன்.*

*சுவாமிகளின் நாடகங்களையும் நூற்றுக்கணக்கான தனிப் பாடல்களையும் நல்ல முறையிலே மீண்டும் அச்சியற்ற வேண்டும், அவை இலக்கிய உலகிலே இடம் பெற வேண்டும், புதுச்சேரி மண்ணிலே சுவாமிகளின் திருவுருவை மறைத்த இடத்திலே ஒரு மண்டபம் எழுப்ப வேண்டும்*

*இவை நான் காணும் கனவுகள் காலம் இவற்றை நனவாக்கட்டும்*

'அவ்வையகம்'
சென்னை
மன்மத-ஐப்பசி-22

**டி. கே. சண்முகம்**

# அவ்வை சண்முகம்
# வாழ்க்கைக் குறிப்பு



இருபதாம் நூற்றாண்டின் இணையற்ற நாடகக் கலைஞர்கள் என்ற புகழுக்கு உரியவர்கள் டி.கே எஸ். சகோதரர்கள். 'நாடக நால்வர்' எனப்படும் இவர்களின் மூன்றாமவர் தி க சண்முகம் திரு. தி க. சங்கரன், திரு. தி க முத்துசாமி இருவரும் இவருக்கு மூத்தவர்கள். திரு. தி க பகவதி இளையவர்.

நாஞ்சில் நாடு நந்த நாடக நால்வரின் தந்தையார் டி.எஸ். கண்ணுசாமிப் பிள்ளை; தாயார் சீதையம்மாள் 'மனோன்மணியம்' ஆசிரியர் சுந்தரம் பிள்ளை இவருக்கு மாமன் முறை திரு. சண்முகம் 1912 ஏப்ரல் 26ல் திருவனந்தபுரத்தில் பிறந்தார் ஆறாவது வயதிலேயே தவத்திரு சங்கரதாஸ் சுவாமிகள் அவர்களை ஆசிரியராகக் கொண்ட மதுரை தத்துவ மீனலோசனி வித்துவ பால சபையில் நடிகராகச் சேர்ந்தார். சின்னஞ்சிறு வயதிலேயே நாரதர் - அபிமன்யு - மனோகரன் முதலிய வேடங்களில் நடித்துப் புகழ் பெற்றார்.

1941-ல் மதுரைத் தமிழ்ச் சங்கம் இவருக்கு 'முத்தமிழ்க் கலாவித்துவ ரத்தினம்' என்ற பட்டத்தை வழங்கியது. 1944-ல் டாக்டர் ஆர்.கே. சண்முகம் செட்டியார் இவருக்கு 'அவ்வை' என்ற பட்டம் வழங்கினார்.

'மேனகா' படம் முதல் 'கப்பலோட்டிய தமிழன்' படம் வரை பற்பல திரைப்படங்களில் திரு சண்முகம் சிறப்பாக

நடித்தார் இவர் நடித்த 'மேனகா' என்ற சமுதாயப் படம் 1935-ன் சிறந்த படமாகப் பரிசு பெற்றது 1953-ல் 'மனிதன்' என்ற படதத்தில் இவரது நடிப்பிற்காக தமிழகத்தின் சிறந்த திரைப்பட நடிகர் என்பதற்குரிய பரிசினை இவர் பெற்றார்

திரு. சண்முகம் இலங்கை, மலேசியா, சிங்கப்பூர் முதலிய வெளிநாடுகளுக்கும், டில்லி, பம்பாய், கல்கத்தா, நாகபுரி, பெங்களூர், திருவனந்தபுரம் முதலான பற்பல வெளி மாநில நகரங்களுக்கும் தம் குழுவினருடன் சென்று நாடகம் நடத்திப் புகழ் ஈட்டினார்

தென்னிந்திய நடிகர் சங்கத்தின் மாத வெளியீடான ''நடிகன் குரல்'' ஏட்டின் பொறுப்பாசிரியராக மூன்று ஆண்டுகள் பணியாற்றினார்

சங்கரதாஸ் சுவாமிகள் நினைவு மன்றம், இளங்கோ கலைக் கழகம் ஆகியவற்றின் தலைவராகவும், சென்னை நாட்டிய சங்கத்தின் துணைத் தலைவராகவும், பாரதியார் சங்கம், தமிழரசுக் கழகம் ஆகியவற்றின் பொதுச் செயலாளராகவும் இவர் விளங்கி வந்தார்

மகாகவி பாரதியாரின் இலக்கியங்களை நாட்டின் பொது உடைமையாக்கியதில் இவருக்கும் முக்கிய பங்கு உண்டு

1960-ல் தமிழ்நாடு சங்கீத நாடகச் சங்கம் திரு சண்முகத்திற்குச் சிறந்த தமிழ் நாடக நடிகர் என்ற விருது வழங்கியது

1961-ல் பண்டித மோதிலால் நேரு நூற்றாண்டு விழாவின் சார்பில் புது டில்லியில் டி கே எஸ் சகோதரர்களின் நாடகங்கள் நடைபெற்றபோது, பாரதப் பிரதமர் பண்டித நேரு போன்ற பெரியோர்களால் இவர் பாராட்டப் பெற்றார்

20 8 62-ல் டில்லி மத்திய சங்கீத நாடக அகாடமியின் சார்பில் தமிழ்நாட்டின் சிறந்த நாடக நடிகர் என்ற விருது திரு சண்முகத்திற்கு வழங்கப்பட்டது

*1966-ல் கோலாலம்பூரில் நடைபெற்ற முதலாவது உலகத் தமிழ் மாநாட்டில் இவர் பிரதிநிதியாகக் கலந்துகொண்டு தமிழ் நாடக வரலாறுபற்றி ஓர் ஆராய்ச்சிக் கட்டுரை வழங்கினார்.*

*பேரறிஞர் அண்ணா அவர்கள் தமிழக ஆட்சிப் பொறுப்பை ஏற்ற பிறகு, 1968-ல் திரு சண்முகம் சட்டமன்ற மேலவை உறுப்பினராக நியமிக்கப்பட்டார்.*

*5 10 1971ல் பாரதக் குடியரசுத் தலைவர் இவருக்கு ‘பத்மஸ்ரீ’ என்ற சிறப்புப் பட்டம் வழங்கினார்.*

*‘தமிழ் நாடகத் தலைமை ஆசிரியர்’, ‘நாடகக் கலை’, ‘நெஞ்சு மறக்குதில்லையே!’ ஆகிய நூல்களை இவர் எழுதியுள்ளார்*

*அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் இவர் நிகழ்ததிய ஆராய்ச்சிச் சொற்பொழிவுத் தொகுப்பு நூலாகிய ‘நாடகக் கலை’ சென்னைப் பல்கலைக் கழகத்தின் பி ஏ., பி.எஸ்ஸி. ஆகிய வகுப்புகளுக்கு 1972-ல் துணைப் பாட நூலாக வைக்கப் பட்டுள்ள சிறப்பு குறிப்பிட்டத்தக்கது.*

*திரு சண்முகம் 26 4 72-ல் தமது மணிவிழாவின்போது, ‘‘எனது நாடக வாழ்க்கை’’ என்ற புதிய நூலின் முதல் பாகத்தை அரங்கேற்றினார்*

*15 2 73 வியாழக்கிழமை காலையில் சென்னையில் மறைவெய்தினார். கலையுலகம் ஆறாத்துயரத்தில் ஆழ்ந்தது*

*திரு. அவ்வை சண்முகத்தின் நாடக வாழ்க்கை இருபதாம் நூற்றாண்டில் தமிழ் நாடக வரலாற்றில் ஒரு பொன் ஏடு என்று சொன்னால் அது மிகையாகாது*



இராம வீரப்பன்



*7, இராமசாமி தெரு,*
*கோபாலபுரம்,*
*சென்னை - 600 086.*
*தொலைபேசி: 28117166*

நாள் : 21.04.06

# வாழ்த்துரை

“தமிழ் நாடகத தலைமை ஆசிரியா'' என்கிற தலைபபில் தவத்திரு சங்கரதாஸ சுவாமிகளைபபற்றிய வரலாற்றுக குறிபபுகளை, சிறிய அளவில எனனுடைய நாடக ஆசிரியரும, எனக்கு 14 வயது ஆனபோது என்னுடைய எதிர்கால வாழ்க்கைப பாதையை வழிகாட்டி அமைத்துத தந்தவரும் தமிழ நாடக உலகில் ஒப்புயாவு இலலாத தனி இடததைப பெறற வருமான ‘முததமிழ்கலா விதவரததினம்' அவவை டி கே சணமுகம அணணாசசி அவர்கள் 50 ஆண்டுகளுககு முன்னாலே எழுதி வெளியிடடு இருககிறாாகள் ஐமபது ஆண்டுகளுககுப பிறகு அவருடைய அருமைப புதலவா தம்பி டி கே எஸ கலைவாணன அவாகள இதனை மறுபதிபபாகக கொண்டு வருகிறார்கள்

தமிழ நாடகஙகளைப பொறுததவரை கடநத நூறறாணடில மறைந்த கலைஞர்கள் பலருடைய பெயர் தெரியும அதைப போன்றே நாடக ஆசிரியர்கள் சிலருடைய பெயரும் தெரியும் ஆனால் அவர்களைபபற்றிய வரலாறுகள தெளிவாக, விரிவாக எழுதபபடவில்லை பொதுவாகவே தமிழகததில கடநத நூறறாணடில சமுதாய சீர்திருதத இயக்கம தோனறிய ஒரு சூழலில் பழைய கருத்துககளை, மூடக கருததுக்களை எதிர்கக

வேண்டிய அவசியம் நேரிட்டபோது, அந்தக் கருத்துக் களையெல்லாம் அழித்து ஒழிக்கிற முயற்சியில் ஈடுபட வேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. அதன் விளைவாகப் பழமைக் கருத்துக்கள் அல்லது மூடக் கருத்துகளை எதிர்ப்பது என்ற பெயரில் அந்தக் காலத்தில் தோன்றிய நமக்கு முன்னோடிகளாக வாழ்ந்த, இன்றைய வாழ்க்கைக்கு அடித்தளம் அமைத்துத் தந்த பல பெரியவர்களையும் மறந்துவிடுகிற சூழ்நிலை தமிழகத்தில் ஏற்பட்டுவிட்டது.

மேலும், பழைய தமிழ் நாடக முறைகள் புதிதாக உருவெடுத்தபோது, புதிய நாடகங்கள் வருவதற்கு அடிப் படையாக அமைந்தவர்களை நாம் மறந்துவிட்டோம் மாற்றங்கள் என்ற பெயரால் - புதிய சிந்தனைகள் என்கிற பெயரால் அவர்களையெல்லாம் மறந்தது மட்டுமல்ல, நினைக்கத் தகுதியற்றவர்கள் என்ற எண்ணம்கூடப் பலருக்கு ஏற்பட்டுவிட்டது

ஆனால் அவர்களைப் போன்றவர்கள் இல்லையானால் நாம் இல்லை நம்முடைய திறமைகளும் இல்லை அதன் காரணமாக ஏற்பட்டிருக்கிற வளர்ச்சியும் முன்னேற்றமும் இல்லை என்கிற உண்மை புதைந்து போய்விட்டது அந்தச் சூழ்நிலையில் தன்னுடைய நாடக ஆசிரியராக விளங்கிய - எல்லா ஆற்றலையும் பெற்றிருந்த தமிழை இலக்கண இலக் கியங்களோடு கற்றுத் தமிழின் ஆழத்தையும் அகலத்தையும் கண்டறிந்து சிறந்த கவிஞராக, எழுத்தாளராக, நாடக ஆசிரியராக, நடிகராக விளங்கிய தமிழ் நாடகத்திற்கே தலைமை ஆசிரியராகப் பாராட்டப்பெற்ற தவத்திரு **சங்கரதாஸ் சுவாமிகள்** அவர்களைப்பற்றி 50 ஆண்டுகளுக்கு முன்பு எழுதிய நூலை, 50 ஆண்டுகள் கழித்து அவருடைய திருப்புதல்வன் புதிய பதிப்பாக வெளியிடுவது தமிழர்கள்

சரியான நேரத்தில் விழித்துக் கொள்வார்கள், தவறுகளைத் திருத்திக் கொள்வார்கள் என்பதற்கு எடுத்துக்காட்டாக விளங்குகிறது

சிறிய நூல் என்றாலும் மிகச் சிறந்த நூல் எல்லோரும் படித்துத் தெரிந்துகொள்ள வேண்டிய நூல் இது ஒரு வாழ்க்கைக் குறிப்புகள் அடங்கிய நூல் மட்டுமல்ல; தமிழர்கள் போற்றிப் பாதுகாக்க வேண்டிய ஒரு வரலாற்று ஆவணம் அதை அழியாத கருவூலமாக வைத்துக் காப்பாற்ற வேண்டிய பொறுப்பு தமிழர்களுக்கு இருக்கிறது தமிழ் உணர்வுள்ளவர்களுக்கு இருக்கிறது. தமிழ்ச் சிந்தனை உள்ளவர்களுக்கு இருக்கிறது அதற்கு வழிவகுத்த தம்பி டி கே எஸ் கலைவாணன் அவர்களுக்குப் பாராட்டு தெரிவித்து, இந்த நூலை உருவாக்கித் தந்த என்னுடைய ஆசிரியர், எனது வாழ்க்கையின் வழிகாட்டி அமரர் அவ்வை டி கே சண்முகம் அண்ணாச்சி அவர்களுக்கும், இதனை அழகிய முறையில் மறுபதிப்புச் செய்து, தெளிவான முறையில் அச்சிட்டு வெளியிடும் இலக்கியச்சுடர் மூவேந்தர்முத்து அவர்களின் பூவழகி பதிப்பகத்திற்கும், என்னுடைய வணக்கத்தையும் நன்றியையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

# முன்னுரை

## கலைமாமணி டி.கே.எஸ். கலைவாணன்



"**நா**டகம் கலைக்கரசு, நாட்டின் நாகரிகக் கண்ணாடி, பாமரர்களின் பல்கலைக்கழகம், உணர்ச்சியைத் தூண்டிவிட்டு, உள்ளத்தில் புதைந்து கிடக்கும் அன்பையும் அறிவையும் தூய்மையையும் வெளிப்படுத்தி மக்களைப் பயன்படுத்தும் மகத்தான சக்தி"

ஆம்! நாடகக் கலைக்காகவே வாழ்ந்து, தம்வாழ்நாளெல்லாம் நாடகக் கலைக்கே அர்ப்பணித்த என் அன்புத் தந்தையார் தமிழ் நாடகமேதை பத்மஸ்ரீ அவ்வை சண்முகம் அவர்களின் பொன்மொழிகள்தான் இவை நாடகம்தான் அவர் உயிர்மூச்சு தம் ஆறாவது வயதிலேயே தமக்கு நாடகக் கலையினைப் பயிற்றுவித்த - தம் குருநாதராக விளங்கிய 'தமிழ் நாடகத் தந்தை'யெனப் போற்றப்பெறும் தவத்திரு சங்கரதாஸ் சுவாமிகளிடம் மாறாத பாசமும் பக்தியும் கொண்டிருந்தார் என் தந்தையார் சுவாமிகளின் பிறந்த நாளான செப்டம்பர் 7-ஆம் நாளில் ஆண்டுதோறும், அவருக்கு விழா எடுத்தவர் அது மட்டுமல்லாமல், சுவாமிகளின் புகழ்பெற்ற நாடகங்களான சீமந்தனி, பக்த பிரகலாதா, அபிமன்யுசுந்தரி, பவளக்கொடி, சுலோசனாசதி, சதிஅனுசூயா மற்றும் கோவலன் ஆகியவற்றைச் சொந்தமாகப் பதிப்பித்து நூல் வடிவில் கொண்டு வந்தார்

தம் குருநாதர் சுவாமிகளின் நினைவைப் போற்றும் வகையில் ஒரு நினைவு மன்றத்தினை 'சங்கரதாஸ் சுவாமிகள் நினைவு மன்றம்' என்னும் பெயரில் தொடங்கி, சுமார் ஐம்பது ஆண்டுகளுக்கும் மேலாக ஆண்டுதோறும் சுவாமிகளின் பிறந்தநாள் விழாவினைச் சிறப்பாக நடத்தி வந்தார் 1967-ஆம் ஆண்டில், தமிழகத் தலைநகராம் சென்னையிலும், 1968-ஆம் ஆண்டில் மதுரை மாநகரிலும், சுவாமிகள் நூற்றாண்டு விழாவினை மிகச் சிறப்பாக நடத்தியதுடன், நாடகக் கலைக் கருத்தரங்கினையும் நடத்தி, பல்கலைக்கழக அளவிலே இக் கலைக்கு ஒரு முக்கியத்துவத்தைத் தந்தையார் ஏற்படுத்தினார்

சென்னையில் நடைபெற்ற நூற்றாண்டு விழாவினை, அன்று தமிழக முதல்வராக இருந்த பேரறிஞர் அண்ணா தலைமை தாங்கிச் சிறப்பித்தார் மதுரையில், தமுக்கம் திடலுக்கு முன்பாக, நிறுவப்பெற்ற சுவாமிகளின் திருவுருவச் சிலை யினையும், பேரறிஞர் அண்ணா திறந்து வைத்தார் மேலும், சென்னையில் நடைபெற்ற விழாக்களில் பாரத முன்னாள் குடியரசுத் தலைவர் ஆர் வெங்கட்ராமன், மத்திய அமைச்சர் சி சுப்ரமணியம், தமிழக முன்னாள் அமைச்சர் கக்கனஜி, முதலமைச்சர்கள் பக்தவத்சலம், டாக்டர் கலைஞர் கருணாநிதி, டாக்டர் எம் ஜி ஆர் மற்றும் செட்டி நாட்டு அரசர் இராஜா சர் முத்தையா செட்டியார், தொழிலதிபர் அருட்செல்வர், நா மகாலிங்கம், தெ பொ மீனாட்சிசுந்தரனார், சிலம்புச் செல்வர் டாக்டர் ம பொ சி , தமிழவேள், பி டி இராசன் போன்ற முக்கிய சான்றோர்கள் கலந்துகொண்டு சிறப்பித்துள்ளனர்

எனவே, இப்புகழ்வாய்ந்த சங்கரதாஸ் சுவாமிகளின் வாழ்க்கை வரலாற்றினை எல்லோரும் அறிந்துகொள்ள வேண்டும் என்ற எண்ணத்தில் அவருடைய வரலாற்றுக் குறிப்புகளைத் தொகுத்து ஒரு சிறிய நூலாகச் சொந்தமாகப் பதிப்பித்து வெளியிட்டார் தந்தையார் அந்நூல்தான் 'தமிழ்

நாடகத் தலைமையாசிரியர் ' முதல் பதிப்பு வெளியிடப்பட்ட ஆண்டு 1957. அப்போது நூலின் விலை எட்டணாதான் அதன் படிகள் ஒன்றுகூட இல்லாத காரணத்தினால், அதனை மறு பதிப்பாக வெளியிட எண்ணி, நம் பூவழகி பதிப்பகத்தின் உரிமையாளர் இலக்கியச்சுடர் அண்ணன் மூவேந்தர்முத்து அவர்களை அணுகினேன் அவரும் பரிபூர்ண சம்மதத்தோடு இந்நூலை மறுபதிப்புச் செய்திருக்கிறார் அவருக்கு என் இதயபூர்வமான நன்றியினை என் சார்பினும், சங்கரதாஸ் சுவாமிகள் நினைவு மன்றத்தின் சார்பிலும் தெரிவித்துக் கொள்கிறேன் இதனை அழகுற அச்சிட்டுக் கொடுத்த மூவேந்தர் அச்சகத்தார்க்கும் என் நன்றி.

மேலும், இந்நூலுக்கு அணிந்துரை வழங்கி, வாழ்த்திய தமிழக முன்னாள் அமைச்சர் - அருளாளர் - அண்ணன் இராம வீரப்பன் அவர்களுக்கு எங்கள் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்

இன்று சுவாமிகளின் நினைவாக சென்னையில் எங்கள் மன்றமும், மதுரையில் சுவாமிகளின் திருவுருவச் சிலையும், புதுவையில் அவருடைய சமாதியும், நினைவு மண்டபமும் இருக்கின்றன மேலும், சுவாமிகளின் பெயரால் மாணவர் களுக்குப் பயன்பெறும் வகையில் நினைவுச் சொற்பொழிவுகள் நிகழ்த்த, தமிழகத்தின் சில பல்கலைக்கழகங்களில் அறக் கட்டளைகள் நிறுவப்பெற்றிருக்கின்றன இனி மத்திய அரசின் சார்பில் சுவாமிகளின் உருவம் கொண்ட ஓர் அஞ்சல்தலை வெளிவர வேண்டும் விரைவில் வரும் என்று நம்புகிறோம்

தமிழ் மொழியும், தமிழ் நாடகக் கலையும், தமிழ்க் கலைஞர்களும் இருக்கும்வரை சுவாமிகளின் புகழ் என்றும் மறையாமல் நின்று நிலவும் - ஒளிவீசும் என்பதில் ஐயமில்லை

***வாழ்க சங்கரதாசரின் புகழ்!***
***வளர்க தமிழ்நாடகக் கலை!***

நாடகக் கலைஞர்

# ஔவை டி.கே. சண்முகம்

## இலக்கியச்சுடர் மூவேந்தர்முத்து



**நா**டகக் கலைஞர் கலைமாமணி ஔவை டி கே சண்முகம் அவர்களின் 95-வது பிறந்த நாள் விழா 26 4 2006 அன்று சிறப்பாகக் கொண்டாடுகிறார்கள் நாடக உலகில் தனிப்பெரும் முத்திரை பதித்தவர் சிறந்த எழுத்தாளர் அவரைப்பற்றிய நினைவலைகளை எல்லோரும் அறிந்து கொள்வது மிகவும் நல்லது

எளிமையானவர் பல நடிகர்களை உருவாக்கியவர் அவரைப்பற்றிய வரலாற்றை நாம் பார்ப்போம்

புராண நாடகங்கள், தேசபக்தி நாடகங்கள், அறநெறி மற்றும் சீர்திருத்தக் கருத்துகள் கொண்ட நாடகங்கள் எனப் பல்வேறு நாடகங்களை அரங்கேற்றித் தமிழ மக்களின் அமோக ஆதரவைப் பெற்று மிகவும் பிரபலமாக விளங்கியது டி கே எஸ் சகோதரர்களின் நாடக சபா அந்தச் சகேதரர்கள் நால்வரில் ஒருவர்தான் தி க சண்முகம் அவர்கள் ''நாடகத் துறையில் மறுமலர்ச்சிக்கு வித்தூன்றியவர்களில் தலையாய இடத்தைப் பெற்றவர் என்றும், நாடகத் துறையின் தொல்காப்பியர்'' என்றும் முத்தமிழறிஞர் டாக்டர் கலைஞர் அவர்கள் குறிப்பிடுகிறார்கள்

1912, ஏப்ரல் 6ஆம் தேதி பிறந்த தி க சண்முகம் அவர்கள் தமது ஆறாவது வயதிலேயே நாடகத் தந்தை என்று

போற்றப்பட்ட சங்கரதாஸ் சுவாமிகளின் மதுரை தத்துவ மீனலோசினி வித்துவபால சபையில் நடிகராகச் சேர்ந்தார் 74 நாடகங்களில் பல்வேறு குணச்சித்திரப் பாத்திரங்களில் நடித்து, நடிப்பால் மக்கள் மனத்தை ஈர்த்தார் அவற்றுள் சிறுவர்களுக்கும் பெரியவர்களுக்கும் அறநெறி பாடல்களைப் பாடிய பழந்தமிழ்ப் பெண்பாற்புலவரான ஔவை என்பவரின் வாழ்க்கை வரலாற்றை நாடகமாக்கி வயது முதிர்ந்த ஔவைப் பாட்டி வேடத்தை இவர் தாங்கிச் சிறப்பாக நடித்து, தமிழறிஞர் பெருமக்களின் பாராட்டைப் பெற்றார் அதன் பின்னர் இவர் 'ஔவை சண்முகம்' என்று அந்தப் பாத்திரப் பெயர் அடை மொழியுடன் அழைக்கப்பட்டார்

1922-இல் அன்னியப் பொருட்களை எதிர்த்து நாடெங்கும் தேசப் பிதா காந்திஜி கதர் இயக்கம் என்ற ஒரு தனி இயக்கத்தை ஆரம்பித்த நேரத்தில் ''கதரின் வெற்றி'' என்றொரு நாடகத்தைத் தயாரித்தார்

கதரின் பெருமைபற்றி விளக்கிய அந்த நாடகம்தான் தமிழ்நாட்டில் முதன்முதலாக நடத்தப்பெற்ற தேசியச் சமூக நாடகமாகும் அந்த நாடகத்தின் பாத்திரங்களை யாவரும் கதர் உடுத்தி நடித்தார்கள் பின்னர் 1931இல் வங்கம் தந்த சிங்கம் சுதந்திரப் போர் வீரர் பகத் சிங்கை வைத்துத் தேச பக்தி என்னும் நாடகத்தை மேடையில் இயற்றினார்

இந்நாடகத்தில் பாடப்பட்ட பாடல்கள் மக்களிடையே விடுதலை வேட்கையைத் தூண்டிவிட்டன இந்த இரு நாடகங் களும் ஆங்கில அரசால் பின்பு தடை செய்யப்பட்டன பெரிய வர்களுக்கு மட்டுமின்றி, சிறுவர்களுக்கான 'அப்பாவின் ஆசை' என்ற நாடகத்தையும் அரங்கேறச் செய்து வெற்றி கண்டார்

1941இல் மதுரைத் தமிழ்ச் சங்கம், இவருக்கு 'முத்தமிழ் கலா வித்துவரத்தினம்' என்னும் பட்டத்தைச் சூட்டியது

1950இல் இவருடைய முயற்சியால் தொடங்கப்பெற்ற நாடகக் கழகத்தின் முதல் தலைவராக இரண்டாண்டுகள் பணி புரிந்தார் இலங்கை, மலேசியா, சிங்கப்பூர் முதலிய வெளிநாடுகளுக்கும் டில்லி, பம்பாய், கல்கத்தா, நாகபுரி, பெங்களூர், திருவனந்தபுரம் முதலிய வெளி மாநிலங்களுக்கும் தம் குழுவினருடன் சென்று நாடகங்கள் நடத்தியுள்ளார்.

1960இல் தமிழ்நாடு சங்கீத நாடக சங்கம் ஔவை சண்முகம் அவர்களுக்குச் சிறந்த தமிழ் நாடக நடிகர் என்ற விருது வழங்கியது. 1961இல் பண்டித மோதிலால் நேரு நூற்றாண்டு விழா சார்பில் புது டில்லியில் இவரது நாடகங்கள் நடைபெற்றபோது பண்டித நேரு அவற்றைப் பார்த்து மகிழ்ந்து பாராட்டி இருக்கிறார்

1963 புதுடில்லி சங்கீத நாடக அகாடமி சண்முகம் அவர்களுக்கு இந்தியாவின் சிறந்த நாடக நடிகருக்கான விருது வழங்கிக் கௌரவித்தது

1968இல் சென்னை தமிழ்நாடு சட்டமன்ற மேலவை உறுப்பினராக நியமிக்கப்பட்டார் 1971இல் இந்தியக் குடியரசுத் தலைவரால் பத்மஸ்ரீ பட்டம் பெற்றார் 'நாடகக் கலை' என்னும் நூலை எழுதியிருக்கிறார். இந்த நூல் சென்னைப் பல்கலைக்கழகத்தில் பி ஏ , பி எஸ் சி , ஆகிய வகுப்புகளுக்குத் துணைப் பாட நூலாக வைக்கப்படும் சிறப்புப் பெற்றது இவரது நாடகக் குழுவில் பணியாற்றிய அத்தனைப் பேர்களுக்கும் தமிழ், ஆங்கிலம், கணிதம், சரித்திரம் போன்ற பாடங்களுக்கு வகுப்புகள் எடுக்கச் செய்து, நாடகக் கலைஞர்களைப் படித்தவர்களாக மேம்படுத்தினார் இவரது நாடக வாழ்க்கை தமிழ் நாடக வரலாற்றில் ஒரு பொன் ஏடு என்று சொன்னால் மிகையாகாது

தம் 50 ஆண்டு கால நாடக வாழ்க்கையை இவர், 'எனது நாடக வாழ்க்கை' என்னும் தலைப்பில் நாடக வரலாற்று நூலாக எழுதி வெளியிட்டு இருக்கிறார் தம் நாடக வாழ்க்கையை முதன்முதலாக நூலாக, வெளியிட்ட முதல் நடிகரும் இவர்தான் என்பது குறிப்பிடத்தக்கது இந்த நூலை வானதி பதிப்பகம் வெளியிட்டுப் பெருமை சேர்த்தது 'எனது நாடக வாழ்க்கை' நூல் மூவேந்தர் அச்சகத்தில் அச்சிடப் பெற்றதும் ஒரு பெருமைதானே!

நூல் அச்சாகும்போது மூவேந்தர் அச்சகத்துக்கு அண்ணன் தே ப பெருமாள் அவர்களோடு அடிக்கடி வருவார் காலையில் சண்முகம் அண்ணாச்சி தம்பி தி க பகவதி அவர்களோடு நடந்து வரும்போது, எங்கள் வீட்டுக்கு வந்து என்னை அழைத்துப் பேசிவிட்டுத்தான் இருவரும் செல்வர் அவ்வளவு பண்பானவர்

மேலும், தம் நாடக மேடை அனுபவங்கள் சிலவற்றைத் தொகுத்து 'நெஞ்சு மறப்பதில்லையே' என்ற நூலாக வெளியிட்டு உள்ளார் அவருடைய நாடக சம்பந்தமான சிறந்த கட்டுரைகளும் வானொலியில் இவர் இயற்றிய உரைகளையும் தொகுத்து நாடகச் சிந்தனைகள் என்னும் தலைப்பிலும் ஒரு நூல் வெளிவந்தது தமிழ்நாடு அரசின் தமிழ் வளர்ச்சி மன்றத்தின் சார்பில் இவரது 'எனது நாடக வாழ்க்கை' என்னும் நூல், 1974ஆம் ஆண்டில் நம் நாட்டின் சிறந்த சுயசரிதை நூலுக்கான முதல் பரிசும் ரொக்கமும் பெற்றுள்ளது

அண்ணாச்சி ஔவை டி கே சண்முகம் மணிவிழா ஏ வி எம் இராஜேஸ்வரி திருமண மண்டபத்தில் நடை பெற்றது இந்த விழாவில் நாங்கள் குடும்பத்தோடு சென்று வாழ்த்துப் பெற்றோம். அப்போது நடிகை எம் எஸ் திரௌபதியும வந்திருந்தார்



இபபுகழ வாய்ந்த நாடகக் கலைஞர் தம் 61வது வயதில் 15 2 1973 அனறு இருதய நோயால இவ்வுலகைவிடடு மறைநதார் அரசியல் தலைவர்களும, திரைப்பட நடிகர்களும் ஏராளமாக வநது அஞ்சலி செலுத்தினர் அவர் புகழ் பாடாத நெஞசங்கள இல்லை இடுகாட்டில் ம பொ சி தலைமையில் இரங்கறகூட்டம நடைபெற்றது தி க பகவதி, டி என் சிவதாணு இருவரும் முன்னின்று நடத்தினா நடிகர் சிவகுமாரும், நானும் அருகருகே அமர்நது அஞ்சலி செலுத்தினோம்

இந்தியாவில் குறிப்பாக நம் தமிழ்நாட்டில் நாடகக் கலையும் நடிப்பும் உள்ளவரை இவர் புகழ் என்றும் மங்காது நின்று ஒளிவீசும் என்பது திண்ணம் அவருடைய குருவான சங்கரதாஸ் சுவாமிகள் பற்றிய வாழ்க்கை வரலாற்றைப் பலருக்கும் பயன்படும்படி எழுதியுள்ளார் நாடக உலகில் வரலாற்றை உருவாக்கிய இந்த நூலை எங்கள் பதிப்பகத்தில் வெளியிடுவதில பெருமை கொள்கிறோம் தமிழ் மக்கள் இந்த நூலை விரும்பி வரவேற்பார்கள் வாழ்த்துரை வழங்கிப் பெருமைப்படுத்திய அண்ணன் - அருளாளா ஆர் எம் வீ அவர்களுக்கு எங்கள் பதிப்பகத்தின் சார்பில் நன்றியினைத தெரிவித்துக கொளகிறோம்

அன்புடன்,

**மூவேந்தர்முத்து**

# தமிழே சிறந்தது

## (சங்கரதாஸ் சுவாமிகள்)

### பல்லவி

தமிழே சிறந்ததென உனது நாமம் விளங்க
சாற்றும் அந்தப் பொருளை யாரறிவார்-அம்மா (தமி)

### கண்ணிகள்

அமிழ்தினிற் சிறந்தது ஆரியத் துயர்ந்தது
அகத்திய னார்சிவ னிடத்திலு ணர்ந்தது
அடிசீர் மோனை எதுகை தொடைசேர் தளையின்வகை
யாகும் பாவினஞ் சந்தமா விரிந்தது வண்ணத் (தமி)

திணைபால் காட்டும் விகுதி சிறப்புப் பொதுப்பகுதி
சேர்ந்தவி தங்களெல்லாம் தென்மொழிக்கே தகுதி
இணையெனும் வடமொழி இருமொழியின் பேர்வழி
இசைக்கும் எழுதுவ தெல்லாம் வலஞ்சுழி அதால் (தமி)

அகரத்தோடகரஞ்சேர் வடமொழி தீர்க்கசந்தி
ஆகுமென் றுரைப்பார்கள் அறியார்கள் புத்தி நந்தி
மகரவொற் றிழிவிதி மார்க்கமென் பதைப் புந்தி
வைத்தவர் மருவென்றாரே முந்தி அதால் (தமி)

கயற்கண்ணி மொழிபெயர்ப்பதற்கென வுரைசெய்வார்
கந்தபுராணமதின் காப்புச் செய்யுளறியார்
இயற்படப் புணரியல் என்னுடன் வாதாடுவார்
இசை மராடி என்பதற்கென் புகல்வார் அதால் (தமி)

வடமொழி வழக்கில்லை வழங்குவர் தமிழ்ச்சொல்லை
மலைவேங் கடங்குமரி மற்றிரு கடல் எல்லை
இடமாக வகுத்தவர் இன்றுளார்களு மில்லை
இயம்பும் மீனாட்சி என்ற பெயர் வல்லை அதால் (தமி)

# தமிழ் நாடகத் தலைமையாசிரியர்

**நா**டகத் தமிழை வளர்த்த தந்தை அவர்; நாடகா சிரியர்கள் பலருக்குப் பேராசிரியர் அவர். சென்ற ஐம்பது ஆண்டுகளுக்கிடையே அவரது பாடல் களையோ வசனங்களையோ உபயோகிக்காத நடிக நடிகையர் தமிழ் நாடக உலகில் இல்லையென்றே சொல்லிவிடலாம்.

நாடக உலகம் அப்பெரியாரைத் தமிழ் நாடகத் தலைமையாசிரியர் எனப் போற்றியது. எளிமையும் இனிமையும் ததும்பும் பாடல்களாலும் தேன் சொட்டும் தீந்தமிழ் வசனங்களாலும் அப்பெரு மகனார் இயற்றியருளிய நாடகங்கள்தாம் தமிழ் நாடகக் கலைவளர்ச்சிக்கு அடிப்படைச் செல்வம் என்று கூறினால் அது மிகையாகாது.

முழுப் பெயரையும் சொல்ல வேண்டியதில்லை. சுவாமிகள் என்றாலே போதும். தமிழ் நாடக உலகில் அது சங்கரதாஸ் சுவாமிகள் ஒருவரைத்தான் குறிக்கும்.

சுவாமிகள் காலத்திலிருந்த மிகப் பெரிய புலவர்களும் நாடகாசிரியர்களுமான உடுமலைச் சரபம் முத்துசாமிக் கவிராயர், குடந்தை வீராசாமி வாத்தியார் முதலியோரெல்லாம் சுவாமிகளின் புலமைக்குத் தலை வணங்கிப் பாராட்டினர்.

ஆங்கில மோகத்தால் தாய்மொழியிற் பேசுவது கூடக் கௌரவக் குறைவென்று கருதப்பட்ட காலத்தில் நாடக மேடையின்மூலம் தமிழை வளர்த்த பெரியார் தவத்திரு சங்கரதாஸ் சுவாமிகள். இசை யரங்குகளிலே தெலுங்கு மொழி ஆதிக்கம் பெற்றிருந்த காலத்தில் நாடகமேடையில் தீந்தமிழ்ப் பாடல்களைப் பொழிந்து தமிழுலகை மகிழ் வித்தவர் சங்கரதாஸ் சுவாமிகள்.

## தோற்றம்

1867-ஆம் ஆண்டில் ஆவணித் திங்கள் 22-ஆம் நாள் தமிழ் மாநிலம் சுவாமிகளைத் தாங்கும் பேறு பெற்றது. தமிழர் வரலாற்றிலே அழியாத இடம் பெற்ற கப்பலோட்டிய தமிழர் வ.உ. சிதம்பரனார், மகாகவிபாரதியார், வீர பாண்டியக் கட்டபொம்மன் முதலிய தியாகிகளையும், வீரர்களையும், புலவர் களையும் தந்த திருநெல்வேலி மாவட்டம்தான் நாடகப் புலவராகிய சங்கரதாஸ் சுவாமிகளையும் நமக்குத் தந்தது. தென் பாண்டி நாட்டின் துறைமுக நகரங்களில் ஒன்றான தூத்துக்குடியிலே, வெள்ளை

யரை விரட்டியடித்த 'வெள்ளையத் தேவன்' பரம் பரையிலே போரில் புறமுதுகு காட்டாத வீர மறக் குடியிலே தாமோதரக் கணக்கப் பிள்ளை என்பாரின் செல்வத் திருமகனாகப் பிறந்தார் சங்கரதாஸ் சுவாமிகள்.

## கல்வி

தந்தையார் கல்வி கேள்விகளில் சிறந்து விளங்கிய தமிழ்ப் புலவர். நகர மக்கள் அவரை 'இராமாயணப் புலவர்' என்ற சிறப்புப் பெயரிட்டு அழைத்தனர்.

> **"தந்தை மகற்காற்றும் நன்றி அவையத்து**
> **முந்தி யிருப்பச் செயல்"**

என்னும் தமிழ் மறையை நன்கறிந்த தாமோதரத் தேவர் தமது புதல்வனுக்குத் தாமே தமிழ்க் கல்வி புகட்டினார்.

அக்காலத்தில் 'புலவரேறு' என்று அறிஞர்களால் போற்றப்பட்ட பழனி தண்டபாணி சுவாமிகளிடம் நமது சுவாமிகள் பாடம் கேட்டுத் தமது தமிழறிவை வளர்த்துக் கொண்டார்.

தண்டபாணி சுவாமிகளிடம் தமிழ்ப் பாடம் கேட்ட போது நமது சுவாமிகளுக்கு உடுமலைச்சரபம் முத்துசாமிக் கவிராயர் அவர்கள் சக மாணவரா யிருந்தார். கவிராயர் அவர்கட்கும் ஆசிரியர்

சுவாமிகளுக்குமுள்ள அன்புத் தொடர்பு மிகப் பிரசித்தமானது. அதுபற்றிய சில குறிப்புகளைப் பின்னர் அறிவோம்.

## கணக்கர் கவிஞரானார்

தூத்துக்குடி உப்புப் பண்டகசாலையிலே சுவாமிகள் சிலகாலம் கணக்கராக வேலை செய்தார். தமது பதினாறாவது வயதிலேயே சுவாமிகள் வெண்பா, கலித்துறை, இசைப் பாடல்கள் முதலி யனவற்றை எழுதத் தொடங்கினார். கவிதைப் புலமைக்கும் கணக்கு வேலைக்கும் போட்டியேற் படவே சில ஆண்டுகளுக்குப் பின் சுவாமிகள் தமது இருபத்துநான்காவது வயதில் நாடகத் துறையில் பிரவேசித்தார்.

## நடிகர்-நாடகாசிரியர்

முதன்முதலாகச் சுவாமிகளின் புலமையை அறிந்து பயன்படுத்திக் கொண்டது திருவாளர்கள் ராமுடு ஐயர், கல்யாணராமையர் ஆகிய பழம் பெரும் நடிகர்களின் நாடக சபையெனச் சொல்லப்படுகிறது. இச்சபையில் முதலில் நடிகராகவும் பின்னர் ஆசிரியராகவும் சுவாமிகள் சில ஆண்டுகள் பணி யாற்றினார். இரணியன், இராவணன், எம தருமன், 'நளதமயந்தி'யில் சனீசுவரன் முதலிய வேடங்கள் சுவாமிகளின் நடிப்புத் திறமையை எடுத்துக்காட்டிய சிறந்த பாத்திரங்கள் என்று கருதப்பட்டன.

## சூத்திரதார்

திருவாளர் சாமி நாயுடு அவர்களின் நாடக சபையில் சில காலம் சுவாமிகள் ஆசிரியராக இருந்தார். அப்போது சூத்திரதாராகவும் நடித்து வந்தார். சுவாமிகள் சூத்திரதாராக வந்து நாடக நுணுக்கங்களைப்பற்றியும், நடைபெறவிருக்கும் நாடகத்தின் நீதிகளைப்பற்றியும் நிகழ்த்தும் விரிவுரையைக் கேட்க மக்கள் ஆவலோடு கூடுவார்கள்.

## ஆண்டிக் கோலம்

நாயுடு அவர்களின் குழுவில் இருக்கும்போது சுவாமிகள் வாழ்க்கையில் வெறுப்புற்று, தமது வழிபடு கடவுளாகிய முருகப் பெருமானின் திருவருளை வேண்டிக் கையில் ஐம்பது ரூபாய் களுடன் ஒரு நாள் ஆண்டிக் கோலத்தோடு தீர்த்த யாத்திரை செய்யப் புறப்பட்டுவிட்டார். இவ்வாறு கோவணாண்டிக் கோலத்துடன் தலங்களைச் சுற்றி வந்தபோதுதான் எல்லோரும் அவரைச் சுவாமிகள் என்று அழைத்தத் தொடங்கினர்.

## தத்து புத்திரர்

தீர்த்த யாத்திரை முடிந்ததும் சில ஆண்டுகள் புதுக்கோட்டை மகா வித்துவான் கஞ்சிரா மான்பூண்டியா பிள்ளை அவர்களுடன் சுவாமிகள் இருக்க நேரிட்டது.

புலவர்களால் மிகக் கடினம் என்று கருதப்பட்ட வண்ணம், சந்தம், இவற்றைப் பாடுவதில் சுவாமிகள் மிகவும் வல்லவராயிருந்தார். அவரது 'சந்தக் குழிப்பு'க்களிலே காணப்படும் தாள விந்நியாசங் களையும், சொற்சிலம்பங்களையும் பார்த்துப் பரவசமடைந்த மகா வித்துவான் மான் பூண்டியா பிள்ளை அவர்கள் தவத்திரு சங்கரதாஸ் சுவாமிகளைத் தமது 'தத்து புத்திரராக' ஏற்றுக்கொண்டார்.

## சக மாணவர்கள்

சுவாமிகளைச் சந்தங்கள் பாடச் சொல்லிவிட்டுப் பிள்ளையவர்கள் 'கஞ்சிரா' வாசித்துத் தானே களிப் படைவாராம். இந்தச் சமயத்திலேதான் தமிழகத்தின் தலைசிறந்த மிருதங்க வித்வான்களான திருவாளர்கள் புதுக்கோட்டை தட்சிணாமூர்த்திப் பிள்ளை, பழனி முத்தையா பிள்ளை இருவரும் மகா வித்துவான் மான்பூண்டியா பிள்ளை அவர்களிடம் மாணவர் களாக இருந்து வந்தனர்.

## மீண்டும் நாடகாசிரியர்

தமிழ்நாடு செய்த தவத்தின் பயனாக மகா வித்துவான் மான்பூண்டியா பிள்ளை அவர்கள் வேண்டுகோளின்படி சில ஆண்டுகளுக்குப் பின் சுவாமிகள் மீண்டும் நாடக ஆசிரியப் பொறுப்பை மேற்கொண்டார். பிள்ளை அவர்களையும் அடிக்கடி சென்று பார்த்து வருவதுண்டு. வள்ளி வைத்திய

நாதய்யர், அல்லி பரமேஸ்வர ஐயர் ஆகியோர் நடத்தி வந்த நாடக சபைகளில் சுவாமிகள் சில ஆண்டுகள் ஆசிரியராக இருந்தார். திருவாளர் பி.எஸ். வேலு நாயர் அவர்களின் ஷண்முகானந்த சபையிலும் நெடுங்காலம் சுவாமிகள் பணி புரிந்தார். திரு.பி.எஸ். வேலு நாயர் அவர்களும், எனது தந்தையார் திரு. டி.எஸ். கண்ணுச்சாமிப் பிள்ளை அவர்களும் ஆசிரியர் சுவாமிகளின் அன்புக்குரிய மாணவர் களாவார்கள். திரு. வேலு நாயர் அவர்களின் குழு விலிருந்தபோதுதான் நாடகப் பேராசிரியர் பம்மல் சம்பந்த முதலியார் அவர்களின் 'மனோஹரன்' நாடகத்திற்குச் சுவாமிகள் பாடல்கள் இயற்றினார்.

## மாணவ மாணவியர்

தமிழ் நடிகருலகில் திரு. வேலு நாயர் அவர்களின் பேச்சுத் திறனைப் புகழாதாரில்லை. இத்தகைய நாவன்மை நாயர் அவர்களுக்கேற்பட்டது சுவாமிகள் அளித்த தனிப்பட்ட பயிற்சியினாலும், சுவாமிகளின் பால் நாயரவர்களுக்கிருந்த ஆசிரிய பக்தியினாலும் தான் என்று எனது தந்தையார் சொல்லக் கேட்டிருக் கிறேன்.

அக்காலத்தில் தமிழ்நாட்டில் நடைபெற்று வந்த எல்லா நாடக சபைகளிலும் சுவாமிகள் ஆசிரியராக இருந்திருக்கிறார்.

சென்ற ஐம்பது ஆண்டுகளுக்கிடையே தமிழகத்தில் பிரசித்தி பெற்று விளங்கிய நடிகர்களான திருவாளர்கள் ஜி.எஸ். முனுசாமி நாயுடு, ஜெகந்நாத நாயுடு, சாமிநாத முதலியார், சீனிவாச ஆழ்வார், நடேசபத்தர், ராஜா, வி.எம். கோவிந்தசாமிப் பிள்ளை, எம்.ஆர். கோவிந்தசாமிப் பிள்ளை, சி. கன்னையா, சி.எஸ். சாமண்ணா ஐயர், மகா தேவய்யர், சூரிய நாராயண பாகவதர், சுந்தரராவ், கே.எஸ். அனந்த நாராயண ஐயர், கே. எஸ். செல்லப்ப ஐயர், பைரவ சுந்தரம் பிள்ளை, சீனிவாச பிள்ளை முதலியோரெல்லாம் நமது சுவாமிகளிடம் பயிற்சி பெற்றவர்கள். அவரது பாடல்களைப் பாடிப் புகழ் பெற்றவர்கள் என்பது குறிப்பிடத்தக்கது. நடிகையரிலும் திருமதிகள் பாலாம்பாள், பாலா மணி, அரங்கநாயகி, வி.பி. ஜானகி, கோரங்கி மாணிக்கம், டி.டி. தாயம்மாள் முதலிய பலர் சுவாமிகளின் மாணவிகள் ஆவார்கள்.

## சொந்த நாடகக் குழு

சமரச சன்மார்க்க நாடக சபை என்ற பெயரால் சுவாமிகள் தாமே சொந்தத்தில் ஒரு நாடக சபையையும் சில ஆண்டுகள் நடத்தினார். இந்த நாடகக் குழுவிலேதான் தமிழ் நாடக மேடையின் மங்காத ஒளி விளக்காகத் திகழ்ந்த எஸ்.ஜி. கிட்டப்பாவும் அவரது சகோதரர்களும் பயிற்சி பெற்றனர். இசைப் புலவராக இன்று நம்மிடையே

வாழும் மதுரை திரு. மாரியப்ப சுவாமிகளும் இந்த நாடகக் குழுவில் தோன்றியவரே.

## சிறுவர் நாடகக் குழு

கால வேகத்தில் நடிகர்கள் சுவாமிகளின் பாடல்களை மட்டுமே உபயோகித்துக்கொண்டு உரையாடல்களைத் தம் தம் உளப் போக்கிற்கேற்ற வாறு பேசத் தொடங்கினர். நாடக மேடை விவாத மேடையாயிற்று. நாடகக் கலை நலியத் தொடங் கியது. ஸ்பெஷல் நாடகங்களிலே போட்டியும் பூசலும் தாண்டவமாடின. பெரிய நடிகர்கள் பலரிடம் ஏற்பட்ட இந்தக் கட்டுப்பாடின்மையே சிறுவர்களை நடிகர் களாகக் கொண்ட நாடக சபைகளின் தோற்றத் திற்கும், வெற்றிக்கும் காரணமாக இருந்தன என்பது மறுக்க முடியாத உண்மை. மனம் போன போக்கில் பேசுபவர்கள்பால் வெறுப்புற்ற சுவாமிகள் கட்டுத் திட்டங்களுடன் அடங்கி நடிக்கும் முறையில் சிறுவர் நாடகக் குழுவைத் தோற்றுவித்தார்.

## பால மீன ரஞ்சனி சபை

சுவாமிகள் ஆசிரியராக இருந்த முதல் 'பாய்ஸ்' கம்பெனி திரு. ஜெகந்நாத ஐயர் அவர்களின் பால மீன ரஞ்சனி சங்கீத சபை. பிற்காலத்தில் ஆசிரியப் பொறுப்பேற்றுப் பல நடிக மணிகளைத் தோற்று வித்த திருவாளர்கள் பி. டி. சம்பந்தம், எம். எஸ். முத்துகிருஷ்ணன், டி. பி. பொன்னுசாமிப் பிள்ளை,

எம்.வி. மணி, டி. பாலசுப்பிர மணியம், கே. சாரங்க பாணி, எஸ்.வி. வெங்கட்ராமன், நவாப் டி.எஸ். இராஜமாணிக்கம், எம். ஆர். ராதா முதலிய எண்ணிறந்த நடிகர்கள் மதுரை பாலமீன ரஞ்சனி சங்கீத சபையில் இருந்தவர்கள் என்பது குறிப் பிடத்தக்கது.

## தத்துவ மீனலோசனி சபை

சிலகாலம் அந்தச் சபையில் இருந்த பிறகு திரு. ஜெகந்நாதய்யர் அவர்களுடன் ஏற்பட்ட மனத் தாங்கலின் விளைவாகச் சுவாமிகள் மதுரைக்கு வந்து சில நண்பர்களின் கூட்டுறவோடு 1918-ஆம் ஆண்டில் தத்துவ மீனலோசனி வித்துவ பால சபா என்ற நாடகக் குழுவைத் தோற்றுவித்து அதன் ஆசிரியராக அமர்ந்தார்.

## எங்கள் குருநாதர்

இந்தக் குழுவில்தான் டி.கே.எஸ். சகோதரர்கள் என்று குறிக்கப்படும் நாங்கள் சேர்க்கப்பட்டோம்.

1918-ஆம் ஆண்டு முதல் 1922-ஆம் ஆண்டுவரை ஏறக்குறைய நான்காண்டுகள் தமிழ் நாடகத் தலைமையாசிரியர் தவத்திரு சங்கரதாஸ் சுவாமி களிடம் நாடகக் கல்வி பயிலும் நற்பேற்றினைப் பெற்றேன். அவருடைய அறிவாற்றலைப்பற்றி நன்கு அறிந்துகொள்ள முடியாத பருவம். இன்று உணருகிறேன் எங்கள் குருநாதரின் பெருமையை.



உத்தமர் சங்கரதாசின் உயிரற்ற உருவும்
தத்துவ மீனலோசினி வித்துவ பால சபையாரும்

## நோயும் சிகிச்சையும்

*1921-ஆம் ஆண்டின் இறுதியில் தத்துவ மீனலோசனி வித்துவ பால சபையார் சென்னைக்குப் புறப்பட்டபோது சுவாமிகள் நோயுற்றதின் காரண மாகத் தூத்துக்குடிக்குச் சென்றார். சென்னையில் நாடகம் தொடங்கியதும் தூத்துக்குடியிலிருந்து வந்த செய்தி எங்களெல்லோரையும் திடுக்கிடச் செய்தது. 'சுவாமிகள் பக்கவாத நோயினால் பீடிக்கப்பட்டு வலது கால் வலது கை முடக்கப்பட்டு வாயும் பேச முடியாத நிலையில் படுக்கையில் இருக்கிறார்' என்றறிந்ததும் எல்லோரும் கண்ணீர் விட்டனர்.*

*கம்பெனியின் உரிமையாளர்களில் ஒருவரான திருவாளர் பழனியா பிள்ளை அவர்கள் சுவாமிகளைச் சென்னைக்கே அழைத்து வந்து சிகிச்சை செய்ய முனைந்தார். மருத்துவர்கள் பலர் வந்து பார்த்தனர். எவ்வித முயற்சியும் பயனளிக்கவில்லை.*

*இந்த நிலையிலிருந்தபோதும் சுவாமிகள் நாடகப் பணியிலிருந்து ஓய்வெடுத்துக் கொள்ள வில்லை. நாடக அரங்கிற்கு வந்து திரை மறைவில் ஒரு சாய்வு நாற்காலியில் படுத்தவாறே அவ்வப்போது கைகளால் சைகை காட்டித் தமது ஆசிரியப் பொறுப்பை நிறைவேற்றி வந்தார்.*

## மறைவு

இவ்வாறு ஆசிரியர்களுக்கெல்லாம் பேராசிரியராகவும், தமிழ் நாடக உலகின் தந்தையாகவும் பல ஆண்டுகளைக் கழித்த சுவாமிகள், இறுதிவரை பிரமச்சாரியாகவே இருந்து 1922-ஆம் ஆண்டு நவம்பர் மாதம் 13-ந் தேதி திங்கட்கிழமை இரவு 11 மணிக்கு பிரஞ்சிந்தியாவைச் சேர்ந்த புதுச்சேரி நகரில் தமது பூதவுடலை நீத்தார்.

தமிழ் நாடகத் தாய் பெறற்கரிய தனது புதல்வனை இழந்தாள். நடிகர்கள் தங்கள் பேராசிரியரை இழந்தனர். கலையுலகம் ஓர் ஒப்பற்ற கலைஞரை இழந்து கண்ணீர் வடித்தது.

## நாடக முறை வகுத்த பெரியார்

ஐம்பதாண்டுகளுக்கு முன்பெல்லாம் தமிழ் நாடக மேடையில் வசனங்கள் கிடையா. முழுதும் பாடல்களே பாடப்பட்டு வந்தன. அக்காலத்தில் நாடகங்களை இயற்றிய ஆசிரியர்கள் எல்லா நாடகங்களையும் இசை நாடகமாகவேதான் எழுதினார்கள். திருவாளர் அருணாசலக் கவிராயர் அவர்களின் 'இராம நாடகம்' இதற்குச் சான்று கூறும்.

சில ஆண்டுகளுக்குப் பின் இந்த நிலை மாறி நடிக நடிகையர் தமது திறமைக்கும் புலமைக்கும் ஏற்றபடி நாடகக் கதைக்குப் புறம்பாகப் போகாமல் கற்பனையாகவே பேசிக்கொள்ளும் முறை

வழக்கத்தில் வந்தது. இவ்வாறு நடைபெறும் உரையாடல்கள் சில சமயங்களில் வரம்பு மீறிப் போய்விடுவது முண்டு.

இந்தச் சமயத்தில்தான் நமது சுவாமிகள் தமிழ் நாடக உலகில் ஒழுங்கும் கட்டுப்பாடும் நிலவ வழிகோலினார். அந்தக் காலத்திலே நடைபெற்று வந்த புராண, இதிகாச, கற்பனை நாடகங்களுக் கெல்லாம் பாடல்களும் உரையாடல்களும் எழுதி வரம்புக்குட்படுத்தியதோடு, புதிய நாடகங்கள் பலவற்றையும் இயற்றி உதவினார்.

இவ்வாறு எழுதப்பட்ட நாடகங்களே சென்ற இருபது ஆண்டுகளுக்கு முன்புவரை தமிழ் நாடக மேடைக் கலை அழிந்து போகாமல் காப்பாற்றி வந்தன. இன்றும் ஸ்பெஷல் நாடக நடிகர்கள் பலருக்கு உயிர் கொடுத்து நிற்பவை சுவாமிகளின் கோவலனும், வள்ளி திருமணமும், பவளக் கொடியும்தாம்.

ஒரு நாடகம் சிறப்பாக இருக்க வேண்டுமானால், அந்நாடகத்தில் பங்கு கொள்ளும் நடிகர்களிடையே ஒழுங்கும் நியதியும் கட்டுப்பாடும் இருக்க வேண்டும். சுவாமிகள் தமது வாழ்நாள் முழுதும் இதையே வலியுறுத்தி வந்தார்.

தமிழகத்திலே முன்பு நடைபெற்று வந்த பல நாடகங்களை உங்களிற் சிலர் பார்த்திருக்கலாம். ஒரு

சிலர் கேள்விப்பட்டுமிருக்கலாம். ஆனால், அந் நாடகங்களை இயற்றிய ஆசிரியர் இன்னாரென்பதை உங்களிற் பெரும்பாலோர் அறிந்திருக்க முடியாது. கோவலன், வள்ளி திருமணம், பவளக்கொடி, அல்லி அர்ஜுனா, சீமந்தனி, சதியனுசூயா, மணிமேகலை, லவகுசா, சாவித்திரி, சதி சுலோசனா, பிரகலாதன், சிறுத்தொண்டர், பிரபுலிங்கலீலை, பார்வதி கல்யாணம், வீரஅபிமன்யு முதலிய பல நாடகங்கள் சுவாமிகளால் இயற்றப்பெற்றவை.

இந்த நாடகங்களையெல்லாம், ஒழுங்காக நாடகங்களை நடித்துவந்த எந்த நாடக சபையாரிடம் நீங்கள் பார்த்திருந்தாலும் அவர்கள் நமது சுவாமி களின்பாடல்களையும்உரையாடல்களையும்உபயோகப் படுத்தியிருப்பார்கள்என்பதற்கையமில்லை.

மேற்குறிப்பிட்ட நாடகங்கள் அனைத்தும் இன்று சிலருக்குப் பிடிக்காதிருக்கலாம். ஆனால், இவைதாம் தமிழ் நாடக மேடையைப் பாதுகாத்துத் தந்தவை என்பதைத் தமிழர்கள் மறந்துவிடக் கூடாது. புராண இதிகாசக் கதைகள் என்பதற்காக அந்நாடகங்களிலே பொதிந்து கிடக்கும் பொன்னுரைகளையும், பேருண் மைகளையும், அவற்றைப் பல ஆண்டுகளுக்குமுன் இயற்றியருளிய புலவர் பெருமானின் நாடகத் திறனையும் நல்லிசைப் புலமையையும் அலட்சியப் படுத்துதல் கூடாது.

## நாடகப் புலமை

சுவாமிகளின் நாடகப் புலமையை அக்காலத்தில் வியந்து பாராட்டாதாரில்லை. அவருடைய பாடல் களிலே உயர்ந்த கருத்துக்கள் நிறைந்திருக்கும்; அதே சமயத்தில் கல்லாதாருக்கும் பொருள் விளங்கக்கூடிய முறையில் எளிமையாகவுமிருக்கும்.

பாடல்கள் எழுதும்போது சுவாமிகள் சொற் களைத் தேடிக் கொண்டிருப்பதில்லை. எதுகை, மோனை, நயம், பொருள் இவற்றுடன் சொற்கள் அவரைத் தேடி வந்து நிற்கும். ஒரே நாளிரவில் ஒரு நாடகம் முழுவதையும் கற்பனையாக எழுதி முடிக்கும் அரும்பெரும் ஆற்றல் சுவாமிகளுக்கிருந்தது.

ஒரு முறை எழுதியதை அடித்துவிட்டுத் திருத்தி எழுதும் வழக்கம் சுவாமிகளிடம் இருந்ததில்லை. அடித்தல் திருத்தல் இல்லாமல் தொடர்ந்து எழுதிக் கொண்டே போவார். சிந்தனை செய்ய நேரும் சந்தர்ப்பங்களில் எழுதுவதை நிறுத்தாமல் சிவமயம், வேலும் மயிலுந் துணை என்று பலமுறை எழுதிக் கொண்டே இருப்பார். இரண்டொரு பக்கங்கள் இவ்வாறு எழுதியபின் மீண்டும் விட்ட இடத் திலிருந்து தொடர்ந்து பாடலைப் பூர்த்தி செய்வார். சுவாமிகள் எழுதிய நாடகக் கையெழுத்துப் பிரதிகள் இந்த உண்மையை அறிவிக்கின்றன.

## வீர அபிமன்யு

சுவாமிகளின் புலமைக்கு எடுத்துக்காட்டாக எண்ணற்ற சம்பவங்கள் இருக்கின்றன. அவற்றில் அதிசயிக்கத்தக்க ஒரே ஒரு சம்பவத்தை மட்டும் கூறுகிறேன்:

நான் நடிக்கத் தொடங்கிய காலத்தில் அநேகமாக எல்லா நாடகங்களிலும் எனக்கு நாரதர் வேடமே கொடுக் கப்பட்டு வந்தது. ஒரு நாள் நாடக சபையின் உரிமையாளர்களில் ஒருவரான திரு. பழனியா பிள்ளை அவர்கள் சுவாமிகளிடம், ''சுவாமி! சண்முகம் கதாநாயகனாக நடிப்பதற்கு ஏற்றபடி ஒரு நாடகம் எழுதுங்கள்'' என்று கூறினார். அப்போது எனக்கு வயது ஏழு; என்றாலும் நன்றாக நினைவிருக்கிறது.

அன்று மாலை சுவாமிகள் புத்தகக் கடைக்குச் சென்று அபிமன்யுசுந்தரி அம்மானைப் பாடல் பிரதி யொன்று வாங்கி வந்தார். இரவு சாப்பாட்டுக்குப் பிறகு ஒரு 'அரிக்கன்' விளக்கை அருகில் வைத்துக் கொண்டு எழுதத் தொடங் கினார். மறுநாள் பொழுது விடிந்து நாங்கள் எழுந்தபோது சுவாமிகள் நிம் மதியாக உறங்கிக் கொண்டிருந்தார். அவரது படுக்கை யருகே அபிமன்யு நாடகம் மங்களப் பாட்டுடன் முடித்து வைக்கப்பட்டிருந்தது.

இது வெறும் கட்டுக் கதையன்று; உயர்வு நவிற்சியுமன்று. கண்கண்ட உண்மை. இச்சம்பவத்தை

உடனிருந்து பார்த்த எங்கள் சக நடிகர்கள் சிலர் இன்றும் இருக்கின்றனர். திரு. பழனியா பிள்ளை அவர்கள் எல்லோரையும் அழைத்து 'அபிமன்யு' நாடகத்தைக் காண்பித்து ஆனந்தக் கண்ணீர் விட்டார்.

நூற்றுக்கு மேற்பட்ட பாடல்கள்!... அதற்கேற்ற உரையாடல்கள்! ஆரம்பத்திலிருந்து முடிவுவரை அடித்தல் திருத்தல் கிடையாது!... ஒரு புத்தகத்தைப் பார்த்து நகல் எடுக்கும் வேலையைக்கூட இவ்வளவு விரைவாகச் செய்ய முடியாது. கற்பனையாக நான்கு மணி நேரம் நடைபெறக்கூடிய ஒரு நாடகத்தையே எழுதி முடித்துவிட்டார் சுவாமிகள். அவருடைய புலமைத் திறனை என்னென்று கூறுவது?

''அடே சின்னப் பயலே! இந்த 'அபிமன்யு' நாடகம் உனக்காக எழுதப்பட்டது'' என்று கூறிச் சுவாமிகள் அன்று என் முதுகிலே தட்டியபோது எனக்கு அது பெரிதாகத் தோன்றவில்லை. இன்று அதை நினைத்துப் பூரிப்படைகிறேன்; பெருமிதங் கொள்கிறேன்.

## கற்பனைச் சிறப்பு

ஒரே இரவில் இவ்வளவு துரிதமாக எழுதி முடித்த 'அபிமன்யு' நாடகத்தில் உள்ள பாடல்களிலும் உரையாடல்களிலும் நிறைந்துள்ள கருத்துக்கள் எண்ணி எண்ணி இன்புறுதற்குரியன. சுவை மிகுந்த ஒரு வசனத்தைக் குறிப்பிடுகிறேன்.



சுவாமிகள் சடலத்தின் முன்
தம்பி பகவதி

சுந்தரியை அபிமன்யுவுக்குக் கொடுக்க மறுத்து, துரியோதனன் மகன் இலக்கணகுமாரனுக்கு மண முடிக்கச் சகல ஏற்பாடுகளும் நடைபெறுகின்றன. மணமகன் தனது பரிவாரங்களுடன் வந்துவிட்டான். மங்கல வாத்தியங்கள் முழங்குகின்றன. இன்னும் சிறிது நேரத்தில் மணப் பெண்ணை அழைத்துப் போக வந்துவிடுவார்கள். இந்த மனமற்ற மணத்திற்காக நடக்கும் மேளதாள ஒலிகளைக் கேட்டுச் சுந்தரி உடல் நடுங்குகிறாள்; கண்ணீர் விடுகிறாள். இசைக் கருவிகளின் முழக்கம் அவள் இதயத்தில் அடிப்பது போலிருக்கிறது. இந்த நெருக்கடியான நேரத்தில் வழக்கம்போல் சுந்தரிக்கு மலர்கள் கொண்டு வந்த ஒரு பாட்டியின்மூலம் அத்தான் அபிமன்யு வந்து விட்ட சேதி தெரிகிறது. பூச்செண்டுக்குள் காதலன் வைத்தனுப்பிய கணையாழியும் ஓலையும் அவள் கையில் கிடைக்கின்றன. ஆனந்தக் கண்ணீர் வடிக்கிறாள் சுந்தரி. முன்பு இதயத்தைத் தாக்கித் துன்பத்தைத் தந்த அதே மேளவாத்திய ஒலிகள் இப்போது அவர் இதயத்தை மகிழ்விக்கின்றன. வசனத்தைப் படியுங்கள். சுந்தரியின் வாயிலாகச் சுவாமிகளின் புலமை வெளிப்படுகின்றது.

''தோழி! என்ன அதிசயமடீ! சற்று நேரத்திற்கு முன் அந்த முட்டாள் இலக்கணனுக்கு நான் மனைவி யாகப் போவதை அறிவித்து என் இதயத்தைத் துன்புறுத்திய அதே மேளதாள வாத்திய ஒலி

களெல்லாம் இப்போது எனக்குத் தேறுதல் கூறுவது போல் ஒலிக்கின்றனவே!...

"துந்துபிகளெல்லாம் தும் தும் தும் என்றும், சங்கு களெல்லாம் பம் பம் பம் என்றும், தாளவகைச் சல்லரி மல்லரி கரடிகைகளோ தீம் தீம் தீம் என்றும், முரசு, பேரிகை, மிருதங்கங்களோ தோம் தோம் தோம் என்றும் தொனிக்கின்றன. ஆகவே, இவ்வகை வாத்திய ஒலிகள் எல்லாம் ஒன்றுகூடி தும்பம் தீம் தோம், தும்பம் தீம்தோம், துன்பம் தீந்தோம், துன்பம் தீர்ந்தோம் என்னும் பொருளைக் கொடுக்கலாயின. ஆஹா! நான் செய்த பாக்கியமே பாக்கியம்."

இந்த வசனத்தைச் சுந்தரி பேசி முடித்ததும் அந்த நாளில் சபையோர் நீண்ட நேரம் கைதட்டித் தங்கள் பாராட்டைத் தெரிவிப்பார்கள். இந்த அருமையான கற்பனை ஒரே இரவில் எழுதி முடித்த ஒரு நாடகத்தில் இருந்தது என்பதை எண்ணிப் பார்க்கும்போது சுவாமி களின் புலமை நன்கு புலனாகும்.

## கோவலன்

சுமார் 43 ஆண்டுகளுக்குமுன் சுவாமிகளால் எழுதப்பட்ட கோவலன் நாடகம் மிகப் பிரசித்தி பெற்றது. தமிழ் நடிகர்கள் அனைவரும் இந் நாடகத்தை நடித்திருக்கின்றனர். புகழ்பெற்ற இந்தக் 'கோவலன்' நாடகத்தை இன்று புலவர்கள் சிலர் கண்டிக்கின்றனர்; குறை கூறுகின்றனர். ஐம்பெருங்

காப்பியங்களில் ஒன்றான சிலப்பதிகாரத்தின் பெருமை தெரியாத எவனோ ஒருவன் 'கோவலன்' என்ற பெயரால் ஒரு கூத்தைக் கிறுக்கி வைத்து விட்டான் என்பது புலவர்களின் எண்ணம்.

கோவலன் கதை நாடகமேடைக்கு வந்த வரலாறும் சுவாமிகளின் பெரும் புலமைத் திறனும் இவர்களுக்குத் தெரியாது. தமிழ்மொழியிலே உள்ள அடிப்படை நூல்கள் அத்தனையும் சுவாமிகளுக்கு மனப்பாடம். அவருடைய பாடல்களிலும் வசனங் களிலும் திருக்குறளும் நாலடியாரும் வாரி இறைக் கப்பட்டிருப்பதைக் காணலாம்.

புறநானூறு, அகநானூறு, திருமுருகாற்றுப் படை, கலித்தொகை, குறுந்தொகை முதலிய சங்க நூல்களிலே புதைந்து கிடக்கும் சீரிய பேருண் மைகளெல்லாம் சுவாமிகளின் உரையாடல்களிலே எளிமையோடு வெளிவந்து உலாவுவதைக் காணலாம்.

மணிமேகலையைச் சிறிதும் மாற்றம் செய்யாமல் காப்பியப்படியே நாடகமாக்கித் தந்த சுவாமிகள், சிலப்பதிகாரக் கோவலனுக்கு வேறு வடிவம் கொடுத்திருப்பாரா என்பதைச் சிந்தித்துப் பார்க்க வேண்டும். நாடக மேடைக் கோவலனை அந்தக் காலத்தில் பண்டிதர்களும் பார்த்து மகிழ்ந்திருக் கின்றனர். அவர்களில் எவரும் சிலப்பதிகாரத்தோடு நாடகக் கோவலனை இணைத்துப் பார்த்துக் குறை கூற முன் வரவில்லை.

அந்த நாளில் சுவாமிகள் இலங்கைக்குச் சென்றிருந்தபோது மாபெரும் புலவர்கள் நிறைந்த யாழ்ப்பாணம் தமிழ்ச் சங்கத்தில் சுவாமிகளின் புலமையை ஆராயப் பல கேள்விகள் கேட்கப் பட்டன. அக் கேள்விகளுக்கெல்லாம் மிக எளிதாகச் சுவாமிகள் விடையளிக்கவே, அவரது முத்தமிழ்ப் புலமையைப் பாராட்டிச் சங்கத்தார் வலம்புரிச் சங்கம் ஒன்றைப் பரிசாகத் தந்து சுவாமிகளைப் போற்றினர். இத்தகைய ஒரு பெரும் புலவர்மீது சிலப்பதிகாரத்தை அறியாதவர் என்ற குற்றச்சாட்டை வீசுதல் முறையன்று. கோவலன் நாடகம் தோன்றிய வரலாறு இது:

'நளவெண்பா' பாடிய புகழேந்திப் புலவர் பெயரால் அம்மானைப் பாடலாக நங்கைக் கதைகள் பல நமது நாட்டில் உலவி வந்தன. இக் கதைகள் நமது தாய்மார்களைப் பெரிதும் கவர்ந்தன. அல்லி அரசாணிமாலை, அபிமன்யு சுந்தரிமாலை, புலந்திரன் தூது, பவளக்கொடி மாலை, காத்தவராயன் கதை முதலிய பல கதைகள் இந்த வரிசையில் இடம் பெற்றவை. புலமைக்கடல் புகழேந்திப் புலவருக்கும் இந்தக் கதைகளுக்கும் எவ்விதச் சம்பந்தமும் இருக்க முடியாது. ஆனால், இந்தப் புத்தகங்களில் எல்லாம் ''புகழேந்திப் புலவர் அம்மானைப் பாடல்கள்'' என்றே குறிப்பிட்டிருக்கும். தன்னை மறைத்துக் கொள்ள விரும்பிய யாரோ ஒரு புண்ணியவான் புகழேந்திப் புலவர்மீது இப் பழியைச் சுமத்தினார் என்றே கொள்ள வேண்டும்.

சுவை மிகுந்த இக் கதைகள் பெரும்பாலும் நாடகமாக்கி நடிக்கப்பட்டன. இந்த நங்கைக் கதைகளிலே ஒன்றுதான் கோவலன் என்ற பெயரால் நாடக மேடைக்கு வந்த கண்ணகி கதை.

முதலில் கோவலனை நாடக மேடைக்குக் கொண்டு வந்தவர்கள் ஆலந்தூர் ஒரிஜினல் நாடகக் கம்பெனியார் என்று சொல்லப்படுகிறது. அவர்கள் இந்நாடகத்தை இரண்டு பாகமாக இரண்டு இரவுகள் நடத்தினார்களாம்.

'அல்லி பரமேஸ்வர ஐயர்' அவர்கள் கம்பெனியில் சுவாமிகள் இருந்தபோது கோவலன் நாடகம் ஒரே இரவில் நடிக்கும் முறையில் புதிதாக எழுதப்பெற்றது. விலை மாதர் கூட்டுறவால் அல்லற் படும் இளைஞர்களுக்கு நீதி புகட்ட ஒரு புதிய கதையை எழுதுவதைவிட நாடு நன்கறிந்த 'கோவலன்' கதையை எழுதுவது நல்ல பயனைத் தரும் என்பது சுவாமிகளின் நோக்கமாயிருந்திருக்க வேண்டும். முதலில் கோவலனாக நடித்த திரு. சூரிய நாரயண பாகவதர் அவர்கள் சிறந்த பாடகரா யிருந்ததால் அவருக்கென்றே பெரும்பாலும் வசனங்கள் தேவையில்லாத முறையில் எளிய நடையில் முழுதும் பாடல்களாகவே எழுதிக் கொடுத்தார் சுவாமிகள். அதன் பிறகு திரு. வேலு நாயர் அவர்கள் கோவலனாக நடித்தபோது வசனங் களும் எழுதப்பட்டன. திரு. பரமேஸ்வர ஐயர்

அவர்கள் குழுவில் என் தந்தையாரும் நடிகரா யிருந்தமையால் இச்செய்திகளை அவர்மூலம் நான் அறிய முடிந்தது.

கோவலன் நாடகத்தை முதன் முறை மதுரையில் அரங்கேற்றியபோது நிகழ்ந்த ஒரு சம்பவம் சுவாமி களின் புலமைக்கு மற்றொரு எடுத்துக்காட்டாக விளங்குகிறது.

'கோவலன்' நாடகக் கதை எல்லோருக்கும் தெரிந்திருப்பதால் விளக்கமாகக் குறிப்பிட்ட வேண்டியதில்லை. கண்ணகி கொடுத்த காற்சிலம்பை விற்றுவர மதுரை நகருக்குப் போவதாகக் கூறுகிறான் கோவலன். அப்போது கண்ணகியின்வாய் மொழியாக,

**"மாபாவியோர் கூடி வாழும் மதுரைக்கு**
**மன்னா போகாதீர் இன்று"**

என்ற பாடல் பாடப்படுகின்றது. மதுரை நகரில் அவர்கள் முன்னிலையிலேயே மாபாவியோர் கூடி வாழும் மதுரைக்குப் போகவேண்டாம் என்று பாடினால் அவர்கள் மனம் எப்படியிருக்கும்?.... இந்தப் பாடலைப் பாடத் தொடங்கியதும் சபையோர் கூச்சலிட்டு "எங்கே சங்கரதாஸ்? கொண்டு வா மேடைக்கு" என்று ஆரவாரம் செய்தார்கள்.

சுவாமிகள் மேடைக்கு வந்து கெம்பீரமாக நின்றார். சபையிலிருந்து கேள்விகள் சரமாரியாகக் கிளம்பின. "மாபாவியோர் கூடி வாழும் மதுரை"

என்று குறிப்பிட்டு எழுதியதற்காக மன்னிப்புக் கேட்க வேண்டுமென மக்கள் குழப்பம் செய்தனர். சுவாமிகள் தமது கரங்களை உயர்த்தி அமைதியாக இருக்கும்படி வேண்டிக்கொண்டு தமது கருத்தை விளக்கத் தொடங்கினார்.

''மா என்ற சொல் திருமகளாகிய இலக்குமி யையும், பா என்ற சொல் கலைமகளாகிய பாரதி யையும், வி என்ற சொல் மலைமகளாகிய பார்வதி யையும் குறிக்கிறது'' என்று கூறி, அதற்கு ஆதாரமாகப் பரஞ்சோதி முனிவரின் திருவிளையாடற் புராணத் திலிருந்து சில செய்யுட்களைப் பாடி விளக்கம் தந்தார். ''மாபாவியோர் கூடி வாழும் மதுரை என்றால், திருமகளும் கலைமகளும் மலைமகளும் சேர்ந்து வாழும் மதுரை என்று பொருள்படுகிறது. அதாவது, சகல செல்வங்களும் நிறைந்து விளங்கும் மதுரையில், செல்வம் கொழிக்கும் அத்திருநகரில் இந்தச் சிலம்பை வாங்க ஆள் கிடைக்காதே என்ற கருத்துப்பட ''மா பாவியோர் கூடி வாழும் மதுரைக்கு மன்னா போகாதீர்'' என்று மதுரை நகரைப் பெருமையாகக் குறிப்பிட்டிருக்கிறேனே தவிர, சிறுமைப்படுத்தும் எண்ணம் எனக்கில்லை'' என்றார். சபையோர் சுவாமிகளின் புலமையை வியந்து கை தட்டிப் பாராட்டினார்கள். முன்வரிசையில் இருந்த மதுரைத் தமிழ்ச் சங்கப் புலவர் ஒருவர் எழுந்து, ''சுவாமிகளே! நீர் எந்தக் கருத்தில் எழுதியிருந்தாலும்

சரி; உமது புலமைக்குத் தலை வணங்குகிறோம்'' என்றார்.

## நடிப்பைக் கைவிட்ட கதை

இரணியன், இராவணன், எமன் முதலிய பாத்திரங்களைத் தாங்கிச் சுவாமிகள் நடித்து வந்தாரெனக் குறிப்பிட்டேனல்லவா? அந்த நாளில் இவ்வேடங்களை நடிப்பதில் தனக்கு ஒப்பாரும் மிக்காரும் இல்லையெனச் சுவாமிகள் பெயர் பெற்றிருந்ததாகச் சொல்லப்படுகிறது.

நல்ல உடற்கட்டும், எடுப்பான தோற்றமு முடைய சுவாமிகள் வேடந்தாங்கி மேடையில் நிற்கும்போதே பார்ப்பதற்குப் பயமாக இருக்குமாம். ஆவேசத்துடன் நடித்துத் தமது கெம்பீரமான குரலை உயர்த்திப் பேசும்போது சிறு குழந்தைகள் அலறி விடுவார்களாம்.

சுவாமிகள் இவ்வேடங்களில் நடித்த காலத்தில் நிகழ்ந்த சில அதிசயமான சம்பவங்களைப்பற்றிச் சுவாமிகளின் மாணாக்கர்களில் ஒருவரான எனது தந்தையார் பலமுறை சொல்லக் கேட்டிருக்கிறேன். எதிர்பாராத நிலையில் யாராவது திடீரென்று வந்து பயமுறுத்தும்போதோ, அல்லது அதிர்ச்சியுண்டாக்கத் தக்க பெரும் சத்தத்தைக் கேட்கும்போதோ, ''அப்பா! கர்ப்பம் கலங்கி விடும் போலிருக்கிறதே!'' என்று கூறுவதுண்டல்லவா?

ஒரு முறை சுவாமிகள் சாவித்திரி நாடகத்தில் எமன் வேடத்தில் நடித்தபோது, சத்தியவானுடைய உயிரைக் கவர்ந்து வர முடியாமல் திரும்பிய கிங்கரர் களைக் கோபித்துக்கொள்ளும் கட்டத்தில் ஆவேசத் துடன் கூச்சலிட்டுக் கையிலிருந்த சூலாயுதத்தை ஓங்கித் தரையில் அடித்தவுடன் உண்மையாகவே சபையிலிருந்த ஓர் அம்மையாருக்குக் 'கருச்சிதைவு' ஏற்பட்டுவிட்டதாம். அன்றுமுதல் மேற்சொன்ன காட்சி நடைபெறுமுன் கம்பெனியார் மேடைக்கு வந்து, ''கர்ப்பிணிகள் யாராவது இருந்தால் தயவுசெய்து இந்தக் காட்சி முடியும்வரை வெளியே சென்று விடுங்கள்'' எனக் கேட்டுக் கொள்வார்களாம்.

மற்றொரு சமயம் 'பிரகலாதன்' நாடகத்தில் சுவாமிகள் இரணியனாக நடித்தபோது, ''நாராயணாய நம'' என்று கூறிய பிரகலாதனை இரணியன் தன் தடியிலிருந்து கீழே தள்ளிக் கோபித்துக் கொள்ளும் காட்சியில், சுவாமிகள் பிரகலாதனாக நடித்த சிறுவனைத் தமது வலது கையால் தூக்கிக் கீழே எறிந்து கர்ஜித்தாராம். சபையிலிருந்த ஓர் அம்மையார், ''ஐயோ பாவி! பிள்ளையைக் கொன்னுட்டானே'' என்று அலறி மூர்ச்சையுற்றுச் சாய்ந்துவிட்டாராம்.

'நளதமயந்தி' நாடகத்தில் சுவாமிகளின் 'சனீசுவர பகவான்' வேடம் பார்க்க மிகப் பயங்கரமாக இருக் குமாம். உடம்பெல்லாம் கறுப்பைப் பூசிக்கொண்டு அதன்மேல் எண்ணெயும் தடவிப் பளபளப்பான

கருநிற மேனியுடன் சுவாமிகள் மேடைக்கு வரும் போது, பயந்த சுபாவமுடையவர்கள் கண்களை மூடிக் கொள்வார்களாம்.

ஒரு நாள் சனீசுவரனாக நடித்துவிட்டு விடிய நான்கு மணிக்கு அப்படியே வேடத்தைக் கலைக்காமலேயே எண்ணெய் தேய்த்துக் குளிக்கச் சுவாமிகள் வெளியே சற்று தொலைவிலிருந்த ஒரு கிணற்றுக்குச் சென்றாராம். கருக்கிருட்டில் கிணற்றிலிருந்து தண்ணீரெடுத்துக் கொண்டு எதிரே வந்த ஒரு மங்கை இவரது தோற்றத்தைக் கண்டு அந்த இடத்திலேயே மாரடைப்பினால் உயிர் துறந்தாராம்.

இவ்வாறு பல நிகழ்ச்சிகள் அடிக்கடி ஏற்பட்டு வந்ததின் விளைவாகச் சுவாமிகள் நடிப்பதைக் கைவிட்டு ஆசிரியப் பணியை மட்டும் மேற்கொண்டதாகத் தெரிகிறது.

சுவாமிகள் வேடம் பூண்டு நடிப்பதைப் பார்க்கக் கொடுத்து வைக்காவிட்டாலும், மற்றவர்களுக்குப் பயிற்சியளிப்பதற்காக நடித்துக் காட்டுவதை நான் பார்த்திருக்கிறேன். அதுவும் எமன், இரணியன், சிறுத் தொண்டரில் காள பைரவர், கடோத்கஜன் முதலிய வேடங்களைத் தாங்குவோருக்கு அவரேதான் நடித்துக் காட்டுவார். கண்களை உருட்டி விழித்துக் கோபக் கனல் தெறிக்கப் பற்களை 'நற நற'வென்று கடிக்கும்போது எங்களுக்கெல்லாம் சுவாமிகளைப்

பார்ப்பதற்கே அச்சமாயிருக்கும். சாதாரணத் தோற்றத்திலேயே இவ்வாறு அச்சமேற்படுமானால் வேடத்தையும் போட்டுக்கொண்டு நிற்கும்போது எப்படி இருந்திருக்கும்?

## முத்துச்சாமி சேர் சங்கரதாசர்

ஒரு புலவரை மற்றொரு புலவர் பாராட்டுவது அபூர்வமாக இருந்த அந்தக் காலத்தில் சுவாமி களுக்கும் உடுமலைச் சரபம் முத்துசாமிக் கவிராயர் அவர்களுக்கும் இருந்த அன்புத் தொடர்பைப்பற்றிப் பல பெரியார்கள் வியந்து கூறக் கேட்டிருக்கிறேன். இரு பெரும் புலவர்கள், அதுவும் ஒரே துறையில் ஈடுபட்டிருந்தவர்கள் ஒற்றுமையோடு பழகிய பான்மையைக் கண்டு எல்லோரும் அதிசயப் பட்டிருக்கிறார்கள்.

சுவாமிகள் காலஞ்சென்றபின் தத்துவ மீன லோசனி சபையில் கவிராயர் அவர்கள் சில மாதங்கள் ஆசிரியப் பொறுப்பை ஏற்று மதுரைவீரன், மன்மத தகனம் முதலிய நாடகங்களைப் பயிற்றுவித்தார். எங்களெல்லோரையும் கூட்டி வைத்துக்கொண்டு கவிராயர் அவர்கள் சுவாமிகளுக்கும் தமக்கும் உள்ள தொடர்பைப்பற்றி அடிக்கடி பேசுவதுண்டு.

கவிராயர் அவர்கள் பெரும்பாலும் பாட்டின் கடைசி வரியில் தனது பெயரைக் குறிப்பிடாமல் இருப்பதே இல்லை. அக்காலத்திலிருந்த புலவர்களிற்

பலரும் இவ்வாறு 'முத்திரை அடி' பொறித்துத்தான் பாடலை முடிப்பது வழக்கம். சுவாமிகள் ஒருவர் மட்டும் இதில் மாறுபட்ட கருத்துடையவர். தமது பாடல் ஒன்றில்கூட பெயர் முத்திரை வைத்ததே யில்லை. பிற்காலத்தில் பெயர் விளங்குவதற்காக வாவது ஆசிரியன் பெயரைக் குறிப்பிட வேண்டியது அவசியமெனக் கவிராயர் அவர்கள் சுவாமிகளிடம் அடிக்கடி வற்புறுவத்துவாராம். சுவாமிகள் இதற்கு அடியோடு மறுத்துவிடவே கவிராயர் அவர்கள் தாம் எழுதிய இராமாயண நாடகப் பாடல்கள் சிலவற்றில், ''முத்துச்சாமி சேர் சங்கரதாசர்'' என்று இருவர் பெயரையுமே 'முத்திரை அடி'யாக வைத்துவிட்டார். இலங்கா தகனம் நாடகத்தில் 'அனுமான்' பாடும் சில பாடல்கள் இவ்வாறு இருவர் பெயரையும் தாங்கி நிற்கின்றன.

## புலமை விளையாட்டு

ஒரு முறை கவிராயர் அவர்கள் சுவாமிகளை நோக்கி, ''சங்கரதாஸ் சுவாமிகளே! உம்முடைய பாடல்கள் முள்ளும் முரடும்போல் இருக்கின்றன'' என்றாராம். உடனே சுவாமிகள் சிரித்துக்கொண்டே, ''கவிராயர் பாடல்கள் கல்லும் கரடும்போல் இருக் கின்றனவே!'' என்றாராம். புலவர்களின் விளை யாட்டுப் பேச்சுக்களிலேகூட இனிமை சொட்டு வதைக் காண்கிறோம். முள்ளும் முரடும், கல்லும் கரடும் என்பவற்றை மேலெழுந்தவாரியாகப்

பார்த்தால் முரட்டுத்தனமான பாடலென்றும் கடினமான பாடலென்றும்தான் பொருள் தோன்றும். ஆனால், உட்பொருள் அதுவன்று. முள்ளும் முரடும் போல் என்றால் பலாச்சுளையைப்போல் இனிக்கிறது என்றும், கல்லும் கரடும்போல் என்றால், 'கற்கண்டைப் போன்றது' என்றும் பொருள் கொள்ள வேண்டும்.

## இருவரும் பாடிய பரதன் பாட்டு

கவிராயர் அவர்கள் ஒரு நாள் இராமாயணப் பாடல்களைப் புனைந்துகொண்டிருந்தார். கேகய நாடு சென்றிருந்த பரதன், தீய கனாக் கண்டு தம்பி சத்துருக்கனிடம் தான் கண்ட கனவைச் சொல்லுகிறான். பரதனுக்குப் பாடல் எழுதத் தொடங்கினார் கவிராயர் அவர்கள்.

**நான் கண்டேன் பல தீங் கண்டும் கனவு**
**ஓங்கி எங்கெங்கும் உலகம்இருள**

...................... பாடல் தடைப்பட்டது. அடுத்த வரி பொருத்தமாக வராததால் வெளியே சென்று உலவிக் கொண்டிருந்தார். அப்போது எதிர்பாராத விதமாக அங்கே வந்த சுவாமிகள் கவிராயர் எழுதியிருந்த பாடலைப் பார்த்துவிட்டு அதன் கீழே,

**'ஒலி இடியுடன் மலைகள் உருள'**

என்றெழுதிப் பாடலின் அடுத்த அடியைப் பூர்த்தி செய்துவிட்டு உள்ளே போய்விட்டார். கவிராயர் அவர்கள் தொடர்ந்து எழுதுவதற்காக விரைந்து வந்தவர் தமது பாடல் பூர்த்தி செய்யப்பட்டிருப்பதைக் கண்டதும், அவ்வாறு எழுதியவர் சுவாமிகள்தாம் என்பதை ஊகித்துக்கொண்டு, ''எங்கே சங்கரதாஸ் சுவாமிகள்? வந்து எவ்வளவு நாழியாயிற்று?'' என்று கேட்டாராம்.

## உள்ளத் தொடர்பு

கவிராயர் அவர்களிடம் பாடம் கேட்கும் மாணாக் கர்கள் சுவாமிகளையும், சுவாமிகளிடம் பாடம் கேட்கும் மாணாக்கர்கள் கவிராயர் அவர்களையும் தங்கள் குருநாதராகவே எண்ணிப் போற்றுவது வழக்கம்.

கவிராயரவர்களின் மாணாக்கர்களில் ஒருவராகிய உடுமலை நாராயணக் கவி அவர்கள் சுவாமிகளிடமும் வெண்பா, கலித்துறை முதலியவற்றைப் பாடம் கேட்டாராம்.

சுவாமிகளின் மறைவைக் கேட்டுக் கவிராயர் அவர்களும் அவரது மாணாக்கர்களான திருவாளர்கள் சந்தானகிருஷ்ண நாயுடு, சங்கரலிங்கக் கவிராயர் முதலியோரும் 'இரங்கற் பாக்கள்' எழுதியனுப்பி யிருந்தனர். சுவாமிகளின் பெருமையை விளக்கும் அப் பெரியார்களின் உருக்கமான பாடல்கள் ஒன்று

கூட இன்று நமக்குக் கிடைக்கவில்லை. கவிராயர் அவர்கள் பாடியவற்றில் இரண்டு வரிகள் மட்டும் எங்களுக்கு நினைவிலிருக்கின்றன.

**"நான் சாக நீகாண வேண்டுமென**
**நினைத்திருந் தேன்**
**தான் சாக மருந்துண்ட**
**சங்கரதாஸ் ஐயனே"**

என்ற அந்த இரண்டு வரிகளிலேயே கவிராயர் அவர்களுக்கும் சுவாமிகளுக்கும் இருந்த உள்ளத் தொடர்பு வெளிப்படுகிறதல்லவா?........

## புலவனைப் போற்றிய புலவர்

சுவாமிகள் மிகுந்த உதார குணமுடையவர். எளியோர்க்கிரங்கும் உள்ளம் படைத்தவர். பொருள் திரட்டும் போக்கு அவரிடம் இறுதிவரை இருந்ததே யில்லை. தன்னிடம் இருப்பதை எல்லோருக்கும் கொடுத்து இன்புறும் பண்பு சுவாமிகளிடம் நிறைந்திருந்தது.

அந்தக் காலத்தில் தமிழகத்தின் வட பகுதியிலே நாடகாசிரியராகத் திகழ்ந்தவர் திருவாளர் ஏகை-சிவசண்முகம்பிள்ளை அவர்கள். இராமாயணம், கண்டி ராஜா, ஹரிச்சந்திரன் முதலிய நாடகங்கள் இப்பெரியாரால் இயற்றப்பெற்றவை. வேலூர் தி. நாராயணசாமிப் பிள்ளை அவர்கள் கம்பெனி முதல் இன்றுவரை சம்பூர்ண இராமாயணத்தை

நடிக்கும் எல்லாச் சபையினரும் திரு. சிவசண்முகம் பிள்ளை அவர்களின் பாடல்களையே பாடி வருகிறார்கள் என்பது இப்பெரியாருக்குப் பெருமை தருவதாகும்.

சுவாமிகள் ஒருமுறை இவரைச் சென்னையிலே சந்தித்தபோது இவருடைய கண்டி ராஜா நாடகத் திலுள்ள சந்தப் பாடல்களைப் புகழ்ந்து வெகுவாகப் பாராட்டினார். பிள்ளை அவர்கள் அப்பொழுது கையில் பொருளில்லாது மிகவும் வறுமைவாய்ப் பட்டிருந்தார். இதை அருகிலிருந்த அன்பர்களின் வாயிலாக அறிந்த சுவாமிகள், அந்த இடத்தில் அவரிடம் நேரில் பணம் கொடுத்தால் காசு வாங்கக் கூசுவாரென்றெண்ணி நூறு ரூபாய் நோட்டுக்களை ஓர் உறையில் வைத்துப் பிள்ளையவர்களின் பையில் போட்டு விட்டார். சுவாமிகளிடம் பேசிவிட்டு வண்டியேறிப் புறப்பட்ட திரு. சிவசண்முகம் பிள்ளை அவர்கள் சற்று தூரம் சென்றதும் எதற்கோ பையை எடுத்தவர் 'சங்கரதாசனின் அன்புக் காணிக்கை' என்றெழுதப்பட்ட உறையையும், அதனுள் வைக்கப்பட்டிருந்த நூறு ரூபாய் நோட்டுக் களையும் பார்த்துத் திரும்பி வந்து, "புலவனைப் புலவனே அறிவான்; ஆனால், புலவனைப் புலவன் போற்றுவதில்லை. தாங்கள் அதற்கு விதிவிலக்கு!" என்று கண் கலங்கக் கூறிச் சுவாமிகளைத் தழுவிக் கொண்டார்.

## ஆண்ட சக்கரவர்த்தி

*கம்பெனியில் திங்கட்கிழமைதோறும் பஜனை நடைபெறுவது வழக்கம். நாங்களெல்லோரும் கூட்டமாகவும் தனித் தனியாகவும் சுவாமிகளின் பாடல்களைப் பாடுவோம். மதுரையில் ஒரு நாள் புட்டுத் தோப்பிலுள்ள கம்பெனி வீட்டில் திங்கட் கிழமை பஜனை வழக்கம்போல் நடந்து கொண்டிருந்தது. சித்திரைத் திருவிழா நடைபெறும் சமயம். இரவோடு இரவாக சுவாமி ஊர்வலம் புறப்பட்டுப் புட்டுத் தோப்புக்கு வருகிற நாள். பஜனையில் நாங்களெல்லோரும் பாடி முடித்த பிறகு, வந்திருந்த சில நண்பர்களும் தனித் தனியே பாடினார்கள். கடைசியாகச் சுவாமிகளைப் பாட வேண்டுமென்று எல்லோரும் வற்புறுத்தினார்கள். "எவ்வளவு நேரம் பாடவேண்டும்?" என்று கேட்டார் சுவாமிகள். "தங்கள் மனம்போல் பாடுங்கள்" என்றார் ஒருவர். திருவாளர் பழனியா பிள்ளை அவர்கள், "சுவாமி ஊர்வலம் இங்கு வருகிறவரை பாடுங்கள்" என்றார்.*

*திருப்புகழ்ச் சந்தத்தில் ஆண்ட சக்கரவர்த்தி என்று பாடத் தொடங்கினார் சுவாமிகள். பாடிக்கொண் டேயிருந்தார். ஏற்கெனவே நெட்டுருப் போட்டிருந்த பாடலன்று; அப்போதுதான் கற்பனையாக எழுந்த பாடல். எல்லோரும் வியப்பே வடிவாக வீற்றிருந் தனர். பாடல் முடியவில்லை. மேலும் தொடர்ந்து பாடிக்கொண்டே பரவச நிலையிலிருந்தார்*



'நாடக நால்வர்' என அழைக்கப்படும்
டி.கே.எஸ். சகோதரர்கள் (இளமைக் காலத்தில்)



'நாடக நால்வர்' என போற்றப்பெறும்
டி.கே. சங்கரன், டி.கே. முத்துசாமி,
டி.கே. சண்முகம், டி.கே. பகவதி

சுவாமிகள். சற்று நேரத்தில் சுவாமி ஊர்வலம் வருவதை அறிவிக்கும் நாதசுர இன்னிசை கேட்டது. மேளச் சத்தம் தனது பாட்டுக்கு இடையூறாக வந்த நிலையில் பாடலை முடித்தார் சுவாமிகள். சுமார் ஒரு மணி நேரம் சுவாமிகள் பாடியதாக எல்லோரும் பேசிக் கொண்டார்கள்.

## புகழ் பாட மறுத்தல்

அக்காலத்தில் தமிழறிஞர்களையும் புலவர்களையும் ஆதரித்து வந்த வள்ளல் இராமநாதபுரம் சேதுபதி மன்னர் சுவாமிகளைக் காண விரும்பினார். மன்னருடைய காரியதரிசி ஒருவர் சுவாமிகளை அணுகி, ''நமது சேதுபதி மன்னரைப் பாடாத புலவர்கள் ஒருவருமில்லையே! சுவாமிகள் மட்டும் ஏன் இன்னும் மன்னர்மீது பாடவில்லை? நேரில் வந்து ஒரு பாடல் பாடினால் உங்களுக்குக் 'கனகாபிஷேகம்' செய்வாரே மன்னர்!'' என்றார்.

சுவாமிகள் தொடக்க முதலே மனிதர்களைப் புகழ்ந்து பாடுவதில்லையென்று நோன்பு கொண்டவர். ஆதலால் மன்னர்மீது புகழ்மாலை பாட மறுத்துவிட்டார். மீண்டும் மீண்டும் பலர் வந்து இதுபற்றி வற்புறுத்தியபோது சினங்கொண்டு, ''மன்னனும் மறவன்; நானும் மறவன்; என்னைவிட மன்னன் எந்த வகையிலும் உயர்ந்தவனல்லன். எதற்காக நான் அவனைப் புகழ வேண்டும்? மன்னன்

மீது பாடினால்தான் எனது புலமை மன்னனுக்குப் புரியுமோ?'' என்று கூறிவிட்டார். சுவாமிகள் இறுதி வரையில் 'நரஸ்துதி' பாடவேயில்லையென்பது குறிப்பிடத்தக்கது.

## தமிழை விற்கச் சம்மதியேன்

சுவாமிகள் அவ்வப்போது எழுதிய பக்தி ரசப் பாடல்களையெல்லாம் திரட்டி ஒரு சிறு நூலாக வெளியிடச் சில அச்சகத்தார் முயன்றனர். சுவாமி களிடம் அனுமதி கேட்டபோது, ''இலவசமாகக் கொடுப்பதானால் அச்சிட்டுக் கொள்ளுங்கள். தமிழை விலைக்கு விற்கச் சம்மதிக்க மாட்டேன்'' என்று கூறி மறுத்துவிட்டார்.

## முடிவுரை

திறமை வாய்ந்த ஒரு பெரும் புலவரிடம் இத்தகைய நற்பண்புகளும் குடிகொண்டிருந் தமையால் தமிழ் நாடக உலகம் தவத்திரு சங்கரதாஸ் சுவாமிகளைத் தமிழ் நாடகத் தலைமையாசிரியர் எனப் போற்றி வணங்குகிறது.

சுவாமிகள் மறைந்தார். அவரது பாடல்கள் என்றும் மறையா; அழியா. சுவாமிகளின் திருப்பெயர் தமிழ் உலகம் உள்ளளவும் மங்காது நின்று ஒளி வீசுமாக!

**வணக்கம்!**





தவத்திரு சங்கரதாஸ் சுவாமிகள்
சுவாமிகளின் சமாதி மண்டபத்தின் முன்பாக
அலங்கரிக்கப்பட்ட அவருடைய படம்



புதுவையில் உள்ள சங்கரதாஸ் சுவாமிகளின் சமாதி மண்டபம்.
அருகில் அவ்வை சண்முகம், நடிகர் டி.எஸ். துரைராஜ்



புதுவையில் சுவாமிகள் சமாதியில் நடைபெற்ற குருபூஜை விழாவில் கலந்துகொண்ட திரைக் கலைஞர்கள்



புதுவையில் சுவாமிகள் சமாதி விழாவில்
மத்திய அமைச்சர் சி. சுப்பிரமணியம் தலைமையில்,
டி.கே.எஸ். உரையாற்றுக்கிறார்



சென்னை திரு.வி.க. மண்டபத்தில் ஆர். வெங்கட்ராமன் தலைமையில் நடைபெற்ற சுவாமிகள் விழா



சென்னை திரு.வி.க. மண்டபத்தில் சுவாமிகள் விழாவில் தமிழக அமைச்சர் பி. கக்கன், எம்.ஜி.ஆர். கலந்து கொண்டனர்.



திரு.வி.க. மண்டபத்தில் சுவாமிகள் பிறந்த நாள் விழாவில் டாக்டர் கலைஞர், சிலம்புச் செல்வர் ம.பொ.சி. ஆகியோருடன் டி.கே.எஸ்.



மதுரையில் சுவாமிகளின் சிலை திறப்பு விழாவை முன்னிட்டு நடைபெற்ற வீதி ஊர்வலம்



மதுரையில் உள்ள சங்கரதாஸ் சுவாமிகளின்
திருவுருவச் சிலை நிறுவியவர் :
அவ்வை டி.கே. சண்முகம்



மதுரை தமுக்கம் மைதானத்தின் முன்பாக
நிறுவப்பெற்றிருக்கும் சுவாமிகளின்
திருவுருவச் சிலை



'மந்திரமோ தந்திரமோ மாயமோ சண்முகத்தின்
விந்தை நடிப்பு விசித்திரமோ - செந்தமிழ்நாடு
அன்றுகண்டு போற்றி அடிபணிந்த அவ்வையை நாம்
இன்றுகண்ட காட்சி இது.''

**- கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை**

தமக்கு 'அவ்வை' என்னும் பெயர்வரக்
காரணமாக அமைந்த தமிழ் மக்களின்
மனதில் நீங்காத இடம் பெற்ற-
புகழ்வாய்ந்த 'அவ்வையார்' வேடத்தில்
**பத்மஸ்ரீ அவ்வை. டி.கே. சண்முகம் அவர்கள்.**